# Nutana Yogamu (Yamil) Book

**By**

**R.N.Easvaran**

**Karaikal, Pondichery**




**2017**

மாஸ்டர் சி.வி.வி நமஸ்காரம்

# மாஸ்டர் C.V.V
# அதீத நூதனயோகம் விந்தை விளக்கம்

## வாழ்க்கைக் குறிப்பும் யோகப் பயிற்சியும்

தமிழ் இனிமையிலிருந்து ஏற்படும் இன்பத்திற்கு ஏற்றவாறு மாஸ்டர் அவர்களின் சரித்திரம் அமைந்துள்ளது தனிச்சிறப்பாகும்.

தொகுப்பு & வெளியிடும் பாக்கியம் பெற்றோர் :

**R.N. ஈஸ்வரன் (எ) பரமேஸ்வரன்**
நெ. 2, 2-வது குறுக்கு தெரு,
எஸ்.எஸ். கார்டன், **காரைக்கால்** - 609602.
செல் : **94435 25772**

விலை மதிப்பற்றது.

No. of Copies : 500 Copies
Year : 2017

**ரெகுலர் பிரேயர் : (Regular Prayer)**

நேரம் : காலை 6.00 மாலை 6.00

**Master C.V.V. NAMASKARAM**
**Please make me fit to realise Brahmam and attain Independency in this life.**

மாஸ்டர் சி.வி.வி. நமஸ்காரம்
பிரம்மத்தை யான் அறியும் வண்ணம் என்னை பரிசுத்தமாக்கி இந்த ஜென்மத்திலேயே சுயேச்சை அடையும்படி அருளப் பிரார்த்திக்கிறேன்.

கிடைக்குமிடம் :
திரு. R.N. ஈஸ்வரன் (எ) பரமேஸ்வரன்
நெ. 2, 2-வது குறுக்கு தெரு,
எஸ்.எஸ். கார்டன், காரைக்கால் - 609602.
புதுச்சேரி மாநிலம்.
செல் : 94435 25772

அச்சிட்டோர் :
கலைமகள் கம்ப்யூட்டர் ஆப்செட்
நெ. 3, பழைய காய்கறி சந்தை தெரு, காரைக்கால்.
செல் : 04368 - 222265

**CONTENTS**

# பொருளடக்கம்

| | பக்கம் |
|---|---|
| 1. முகவுரை | 4 |
| 2. வாழ்த்துரை | 10 |
| 3. மாஸ்டர் சி.வி.வி அவர்களின் வாழ்க்கை குறிப்பு | 11 |
| 4. யோகத்தின் சிறப்பு அம்சங்கள் | 17 |
| 5. ஜீவாத்மா நிலை | 32 |
| 6. ப்ரோக்ராம் ஆஃப் செவன் அட்ஜஸ்ட்மெண்டஸ் | 34 |
| 7. மாஸ்டர் அளித்துள்ள சிகிச்சை பற்றிய உபதேசங்கள் | 35 |
| 8. ஃபைவ் லிங்க் Five Links | 36 |
| 9. ஞானம் அடையுங்கள் | 39 |
| 10. பிருக்த ரஹித தாரக ராஜயோகம் | 41 |
| 11. கிரகங்களுக்கான மாஸ்டர் கொடுத்த மந்திரங்கள் | 44 |
| 12. இணைப்பு | 46 |
| 13. ஏழுசக்கரங்கள் | 47 |
| 14. ஓலிடியர் பிட்யூடரி ரெகுலேஷன் 3-வது நேம் விளக்கம். | 48 |
| 15. சி.வி.வி யோகம் பெற்றவரின் மரணம் | 55 |
| 16. 13 பிளானெட்டரி போர்ஸ் | 56 |

## முகவுரை

**உங்கள் எல்லோருக்கும் ஓர் பரபரபூட்டும் நற்செய்தி மாஸ்டர்**

**ஸி, வி, வி ஹெல்ப் அஸ்.**

**See, We, We Help Us.**

மேற்படி செய்தி உங்களுக்கு விநோதமாகவோ புதிராகவோ இருக்கலாம். ஆனால் சிருஷ்டி பிரம்மத்தின் பிரதிநிதியாக தன்னைத்தான் உணர்ந்துகொண்ட மாஸ்டர் சி.வி.வி. அவர்கள் தம் சீடர்களுக்கு போதித்துள்ளது இது தான். உன்னுடைய உள்ளார்ந்த தேவைகள் யாவற்றையும் உடனுக்குடன் நிறைவேற்றித்தர சிருஷ்டிப் பிரம்மம் உனக்குள் எப்போதுமே காத்துக் கொண்டிருக்கிறது அதோடு நேரான தொடர்பு ஏற்படுத்திக்கொண்டு பக்தியோடும் நம்பிக்கையோடும் பிரார்த்திக்க வேண்டுவது தான் உனது கடமை என்றே அவர் கூறியுள்ளார். மாஸ்டர் சி.வி.வி நமஸ்காரம் என்று நாவால் உச்சரித்த உடனே அந்த சிருஷ்டிப் பிரம்மத்துடன் உனக்குத் தொடர்பு ஏற்பட்டுவிடும் அவரது அருள்சக்திமயமான ஆனந்த உயிர் உடன் உனக்குள் பிரவேசித்து வேலை செய்யத் துவங்குவதை நீ உன் அநுபவபூர்வமாக உணர்ந்து கொள்ளலாம். இந்த அனுபவம் உனக்கு மகிழ்ச்சிதரும் உனது குறைகளை எல்லாம் சீர்திருத்தி உன்னை தூய்மைப்படுத்தும் சரீர -குறைபாடுகள் சீராக்கப்படும் ஏழு ஆதார நிலைகளும் சீரமைக்கப்படுவதோடு போதிய தேர்ச்சி பெற்ற பிறகு விஷக்கடிகளுக்கும் நோய் நொடிகளுக்கும் சிகிச்சை அளிக்கும் சக்தியும் உங்களுக்கு அளிக்கப்படுகிறது. பிரம்மத்தை உணர்ந்துகொள்ளவும் அதனால் அமைதியும் மற்றவர்களோடு நல்லிணக்க உறவும் பெற உதவி செய்யும்.

கோடி கோடி மைல்களுக்கு தூரத்திலுள்ள கிரகங்களை அதி பெரும் டெலஸ்கோப்புகளை உருவாக்கி ஆராய்ந்து வருகிறார்கள் விஞ்ஞானிகள். ஆனால் மனிதனின் உடலில் உள்ளே இருக்கும் பல அதிசய செயல்பாடுகளுக்கு நவீன விஞ்ஞானத்திற்கு இன்னமும் விடை கிடைக்கவில்லை. இவற்றை தமது மெஞ்ஞானத்தால் கண்டுபிடித்து விட்டார் மாஸ்டர். பிரம்மத்தில் ஏற்படும் எனர்ஜி (சக்தி) மாற்றங்கள் மனிதனின் சக்தியாலும், மாறுதல்களை மாற்றியமைக்க முடியும் என்பதையும்கூட நம் மாஸ்டர் சி.வி.வி

அவர்கள் தெரிந்து கொண்டு இருந்தார். பிரம்மத்தின் ஒரு சிறிய உருவமே மனிதன். பிரம்மத்தில் ஏற்படும் மாறுதல்களை மாற்றியமைக்கலாம் என்றும், தெளிவாக அறிந்துள்ளார். கோள்களுக்கும், மனிதனுக்கும்,ஏழு சக்கரங்களுக்கும் இடையில் உள்ள தொடர்பை பற்றியும் தியானம், யோகம் என இன்றும் வெளிவராத மிக அரிய ரகசியங்களை மாஸ்டர் உத்தரவுடன் சொல்லப் போகின்றேன்.

மனிதன் வாழ்வின் உயர்வுக்கு அரும்பாடுபட்டு ஞானிகளும் யோகிகளும் சித்தரும் காலகாலம் தொட்டே முயன்று வருகிறார்கள் பல்வேறு சூட்சுமங்களையும் கண்டு பிடித்தனர் அவர் அவர் பக்குவத்திற்கேற்ப சொல்லி கொடுத்தனர். ஆனால் பிறவிச் சிக்கலிருந்து விடுபட்டு பிறவாப் பேரின்ப நிலையை அடைவதே ஒரு உயிரின் உண்மையான நோக்கம், உறுதியான நோக்கம் என்பதை சொல்லி தந்தார் மாஸ்டர் CVV அவர்கள் ஆனால் எல்லோரும் காட்டில் சென்று தவம் கடும்விரதம் செய்ய வேண்டும்.

பிரம்மச்சரியம் இருக்க வேண்டும் என்றும் மாஸ்டர் CVV அவர்கள் வலியுறுத்தவில்லை. இல்லறக் கடமைகளை செய்தபடியும் யோகநிலை நோக்கிப் போகலாம் என்றே கூறியுள்ளார்கள். மாஸ்டர் CVV யோகம் என்பது உயர்ந்த மெய்ஞ்ஞான வழி இல்லற வாழ்க்கையில் இருந்து கொண்டு இந்த யோகம் செய்வது தான் இந்த யோகம். ரகசியமாக மறைத்து பாதுகாக்கப்பட்டு வந்த இந்த யோகம் அனைவரும் பயன்பெற வேண்டும் உலகிலுள்ள அனைத்து மனிதர்களுக்கும் சொந்தமானது என்று மாஸ்டர் CVV தெரிவித்துள்ளார்கள். விஞ்ஞானப்பூர்வமாக யோக மார்க்கத்தையும் மெய்ஞ்ஞானத்தை அடையும் வழியை அனைவருக்கும் போதித்தார்.

ஒரு மனிதனை பக்குவப்படுத்தி ஆன்மிகப் பாதையில் அழைத்துச் சென்று முக்தி நிலையையும் அடையச் செய்யும் ஒரு பெரும் பாக்கியமே மாஸ்டர் CVV யோகமாகும். மாஸ்டர் CVV யோகம் கூறும் பல விஞ்ஞான உண்மைகளையும், ரகசியங்களையும் உங்களுடன் பகிர்ந்து கொள்ளப்போகிறேன்.

மாஸ்டர் CVV யோகம் என்பது உலக மக்கள் அனைவருக்கும் சொந்தமானது என்தை CVV யோக நூல்களே சொல்கின்றன. அப்படியிருக்க இந்த யோக மார்க்கத்தை நான் மூடிவைக்க வேண்டிய அவசியம் என்ன? இந்த பிரபஞ்சம் எப்படி படைக்கப்பட்டது? கிரகங்களும் பூமியும் எப்படி உண்டாயின? உயிரினங்கள் எப்படி உருவாகின? என்பது போன்ற பல கேள்விகளுக்கு விடைகளை சொல்லுவதே CVV யோகம், தன்னுள்ளே உறைந்து நிற்கும் ஆத்மாவை உணர்ந்து அனுபவித்து அந்த ஆத்மாவுடன் கலந்து பரமானந்த நிலையை ஒருவன் பெரும்போதுதான் மரணம் இல்லாத பெருவாழ்வும் பிறவிகள் அறுந்த முக்தி நிலையும் கைகூடும், யோக முறைகளை ஏனையச் சித்தர்கள் நூல்களிலும் இலைமறை காய் போல் அருமையாகச் சொல்லப்பட்டிருப்பினும் அவை எல்லாரும் பழக்கத்தக்க எளிய தெளிவான உரைநடையில் இல்லை என்பதுதான் உண்மை. பிணி, மூப்பு, மரணம் இல்லாமல் வாழவேண்டும் என்பது தான் இந்த அபூர்வ யோகம். இந்த முறைகளை உணராமல் தான் வறுமையிலும், நோயிலும் அறியாமையிலும் இருந்தும் மனித ஜென்மம் கஷ்டப்படுகிறது.

CVV யோகம் என்பது மகா அமைதி நிலையானது மனதுக்கும் உடலுக்கும் மிகுந்த ஆழ்ந்த அமைதியைக் கொடுப்பது அல்லாமல் மனதில் இருக்கும் குழப்பங்கள் பல காலமாக மனதில் இருந்துவரும் பலவிதமான குழப்பங்களையும் சுத்தப்படுத்தி ஒரு மாபெரும் ஆற்றலை தரவல்லது நீங்கள் எண்ணியதை எண்ணியபடியே செயல்படுத்தி அவற்றை நீங்கள் அடையக்கூடிய சக்தியை கொடுக்கிறது. இந்த அமைதியான ஆழ்நிலையில் உங்களது வெளிமனம் அடங்கி மாஸ்டர் சக்தி திறந்துவிடுகிறது நீங்கள் எதை விரும்பினாலும் உடனே அதைச் செய்து கொடுக்கக் கூடியது இத்தகைய சித்திகளை மாஸ்டர் சக்தியே செய்ய முடியும் எது வேண்டுமானாலும் செய்து கொடுக்கும் ஆற்றல் உள்ளது.

உலகத்தில் உள்ள எல்லா சக்திகளும் கொடுக்கத் தவறினாலும் கூட இந்த மாஸ்டர் சக்தி கொஞ்சம் கூட தவறாது. இது மகாசக்தியாகும். அழகாக அமைதியாக உட்கார்ந்துகொண்டும், இல்லை பாய் போட்டு படுத்துக் கொண்டும் யோகம் செய்யக் கூடியது மாஸ்டர் CVV யோகமே உலகிலேயே இதுமட்டும்தான்.

நான் இதை எழுத ஆரம்பித்தபோது வாய்மொழியாகக் கேட்டதையும், புத்தகங்களில் படித்ததும் பல்வேறு மாஸ்டர் CVV யோக நூல்களில் இருந்து எடுத்து உள்ளது உள்ளபடியும் வாக்கியங்கள் அமைக்கப்பட்டிருக்கிறது என்பதையும் அன்போடு தெரிவித்துக்கொள்கிறேன். ஸ்தூல உடல் அழியாமல் கிரகங்களின் தாக்குதலின்றி உடலின் மாற்றத்தை அறியவும் மரணத்தை வெல்லவும் ஸ்தூல உடலைப் பற்றிஅறியவும் உதவியது இந்த CVV யோகம் வழி வகுக்கின்றது. எல்லா ஞானங்களையும் பெற மெர்ச்சரி கோர்ஸ் முதல் ஹாலர் கோர்ஸ் வரைக்கும் உள்ள தியான ரகசியங்களை சொல்லி கொடுத்தார். இந்த யோகத்தை செய்பவர்கள் மற்றுமின்றி அவருடைய சந்ததியரும் பயன்படும் வண்ணம் இந்த யோகம் வழி வகுக்கின்றது. ஆதலால் மனித அழிவினை தடுக்கும் வண்ணமும் இறைவன் என்று சொல்லும் ஆதி பிரம்மத்தை (பரமாத்மாவை) தன்னுள் தெரிவதற்கும் இறப்பில்லா வாழ்வினை அடைவதற்கும் ஆரம்பிக்கப்பட்டதாகும். மரணத்தை அழிக்கலாம் என்று முதன்முதலில் தெரிவித்த மகா புருஷர் ஆவார் CVV அவர்கள், ஒரு மனிதன் இந்த மாஸ்டர் CVV யோகத்தை பற்றி முழுமையாக அறிந்து கொண்டான் என்றால் அவன் இந்த மனித பிறப்பை எடுத்த அர்த்தத்தை உணர்ந்து கொள்வான். மாஸ்டர் சுதந்திர பிரகடனத்தில் சொன்னதுபோல் எல்லோரும் ஜென்மம் எடுத்து சாதிக்குத் தகுந்தபடி ஆசார நடவடிக்கை தர்மப்படி நடந்து வருகிறோமே தவிர நமக்கு ஞானபாகம் மேலிட யாதொரு முயற்சியுமில்லாமல் நம் குழந்தைகளை ஆதரித்து வந்து நமக்கு மூப்பு வந்த காலத்தில் ஏதோ ஜென்மம் எடுத்ததற்கு வேலையாகிவிட்டது.

இனி நல்ல கதி உண்டாக வேண்டும். அடுத்த ஜென்மா நல்லதாய் கிடைக்க வேண்டுமென்கிற எண்ணத்தைக் கொடுத்து கொண்டு நாட்களைக் கழிக்கிறோமே தவிர இப்படி வாழ்வதில் நமக்கு இந்த சிருஷ்டி எண்ண காரணத்தினால் உண்டாயிற்று? நமக்கு இந்த மனுப்படி ஏன் ஜென்மா கொடுக்கப்பட்டது? இப்படி எத்தனை ஜென்மாவுக்குள் போக வேண்டும்? கடைசியில் இதற்கு முடிவென்ன நாம் இருக்கும் நிலைமையில் நமக்குண்டான மக்கள் நம்மால் ஏன் வெளிப்பட்டார்கள்? என்ற விவரங்களை நாம் அறிந்து கொள்ளாமலே நாம் வாழ்கிறோம் இந்த குறையே போக்கவே, பொதுவாய் ஞானம் உண்டாக்கவும்

நம் வாழ்நாட்களை சிரமமில்லாமல் கழிக்கவும், எவ்வித ஏழ்மை நிலையிலிருந்தாலும், மூடராயிருந்தாலும் சர்வ ஞானத்தையும் அறியும் வண்ணம் சிருஷ்டி இரகசியங்களைக் கற்பித்தும் இந்த சிருஷ்டிக்குக் காரணம் இன்னதென்று தெரிவித்தும் நம்மை பிரம்மத்தை அறிந்த மனிதராக்கிவைக்க இங்கு வழி கற்பிக்கப்படுகிறது. துறவறம் இல்லாமலே சர்வ ஞானத்தையும் கொடுத்து நாம் இருக்கும் குடும்பத்திலேயே நாம் பிணி, மூப்பு, மரணம் அற்ற நிலைமையில் இருக்க வழி செய்யப்படுகிறது. நமக்கு ஏழ்மை, கஷ்டம், விசனம் ஆகிய எவ்வித குறையுமில்லாமலிக்கும் வகை ஏற்படுகிறது. நமக்கு மாத்திரமல்ல. நம்மைச் சார்ந்தவர்களும் கூட இப்பலன்களை அடைவர் இதை உத்தேசித்தே இந்த ஸொஸைடியை ஏற்படுத்தி இயல்பாய் அறிய மாஸ்டர் யோக மார்க்கம் உபதேசிக்கப்படுகிறது.

மாஸ்டர் ஒரு இடத்தில் இருந்து மற்றொரு இடத்திற்கு செல்லும் பொழுது மாஸ்டரை பார்த்தவர்கள் எல்லோருக்குள்ளும் மாஸ்டரின் சக்தி பிரவேசித்து அவர்கள் செய்யவேண்டிய பணிகளை செய்ய முடியாமல் மயக்கம் அடைந்து நடக்கும் நபர் எடுத்த காலை கீழே வைக்க முடியாமல் ஒரு கால் மேலேயே ஐந்து நிமிடம் வரை வரை இருந்து சுயநினைவு அடைந்து அவர்கள் தங்கள் பணியைத் தொடர்ந்தனர் இப்படியாக அநேக மகிமைகளை காண்பித்துக் கொண்டே இருந்தார்கள்.

வாழ்க்கை ஒரு வகையில் சுமைதான். ஆனால் அந்தச் சுமையில் ஓர் குதூகலமான இன்பம் சுகமான சோகம் அதை உள்ளம் தாங்கி விடுகிறது. ஆனால் பிரிய நேரிடும் போது சித்தம் கலங்குகிறது. சோகம் நெஞ்சை பிழிகிறது. காலமெல்லாம் நம் வாழ்வில் உணர்வுகள் போராட்டம் வேற வழியில்லை போராடித்தான் ஆகவேண்டும். பினி, மூப்பு, மரணம், உறவு, பிரிவு, நட்பு, காதல், சஞ்சலம் இப்படி எத்தனை எத்தனை பாதைகளில் நம் வாழ்க்கைப் பயணம் கற்பனைகளும் கனவுகளும் கூட வருகின்றன. நினைவுகள் நெஞ்சை அமுத்திச் சித்திரவதை செய்கின்றன. பாசத்துக்குரியவர்களை இழக்க நேரிடும்போது அழுது புலம்புகின்றோம். ஆற்ற முடியாத வேதனையில் தூக்கம் கெட்டுக் கிடக்கின்றோம். மனம் கதறுகிறது. பிரிவை ஏற்க மறுக்கிறது. மீண்டும் பார்க்க முடியாத உறவு விடைப் பெற்றுச் செல்லும்போது சோகத்தில் சிக்கிய உள்ளம் வெடித்துச்

சிதறுகிறது. அதையும் தாங்கிக் கொண்டு இப்படியே இருப்பதற்கு மனித இதயமென்ன ஜடமா இல்லையே? இழப்பு வரும்போதுதெல்லாம் ஞானியரும், சித்தரும், பித்தனும் ஏன் பட்டினத்தார் கூட தன் தாயார் இறந்தபோது அழத்தான் செய்தார்கள். நம் வாழ்க்கை ஓட்டத்தில் உறவுகளின் பிரிவுகளில் மலர்ந்த நினைவுதான் ஆறுதலாகிறது நினைவுகளின் மோதல்களில் பரிதவிக்கும் நினைவுக்கு மலர்ந்த நினைவுதான் மருந்தாகிறது. உறவுகள் இனிமை பிரிவுகள் கொடுமை. இந்த நிலையையே மாற்றியமைக்க வந்த அவதார புருஷர் மாஸ்டர் சி.வி.வி. அவர்கள்.

இப்போது மாஸ்டர் சி.வி.வி என்பவர் யார் என்றால் நமது செந்தமிழ் நாட்டின் காவேரிக்கரையில் உள்ள புனித ஸ்தலமான நெ.2, கீழ டபீர் தெரு, கும்பகோணத்தில் நூதன யோகம் 1910-ம் ஆண்டு முதல் அவர்களால் நடந்து வருகிறது. முற்றிலும் புதுமையானதாகும் இந்த யோகம் பிரக்த, ரஹித, தாரக,ராஜயோகம் என்று அழைக்கப்படுகிறது. இதுவரை வெளியிடப்படாததால் தெரிந்து கொள்ளப்படாமல் மறைப் பொருளாகவும் இரகசியமாகவும் இருந்து வந்த சிருஷ்டி இரகசியங்களை காட்டிக் கொடுக்கக்கூடியதாக இந்த யோகம் அமைந்துள்ளது.

இது எல்லா யோகங்களுக்கும் மேன்மையானதாகும். இந்த யோகத்தில் என் தாயாரின் தந்தையும், என் தாத்தாவுமான திரு. S.G. நாராயணசாமி அவர்கள் இருந்தார்கள் அதன் தொடர்ச்சியாக நான் 1990 ஆண்டு முதல் இந்த யோகத்தில் இருந்துவருகிறேன் எனக்கு தெரிந்த ஆன்மிக ரகசியங்களை மிக அற்புதமான யோக ரகசியங்களை எல்லோருக்கும் இந்த யோகம் பயன்பட வேண்டும் என்பதே என்னுடைய அன்பின் விழைவாகும் ஆரம்பகாலத்தில் அளிக்கப்பட்ட உபதேசங்கள் மகாத்மாவின் கடிதங்கள் பல யோக நூல்கள் யோக ஆலயத்தில் கிடைக்கிறது. ஒரு சில நூல்களிலிருந்து தேவையான முக்கிய பகுதிகளை எளிதில் புரிந்து கொள்ளும் விதமாக தந்திருக்கிறேன். இது புது கண்டுபிடிப்பாக இருக்கிறது. புத்தர், ஏசு கிறிஸ்து, முகம்மது நபி, ஆதி சங்கரர் இவர்கள் வரிசையில் தோன்றியுள்ள மகானாகிய மாஸ்டர் சி.வி.வி அவர்கள்தான் இந்த சிருஷ்டியிலுள்ள இக்குறைபாட்டை சீரமைக்க வேண்டும் என்ற பெரும் பணியை ஏற்றுக் கொண்டுள்ளார். ஆகவே என் மனதின் உள்ளே இருந்து மாஸ்டர் சொல்லிக் கொடுக்க அதை எழுத்தில் வடித்திருக்கிறேன். அன்பர்கள் யாவரும் ஆழ்ந்து படித்து தம் ஆன்மாவை உணரப் பெற்று முழுமைப்பெறடைய வேண்டுமென்று மாஸ்டர் அருளை பிரார்த்திக் கொண்டு முடிக்கிறேன்.

மாஸ்டர் தொண்டில்

**R.N. ஈஸ்வரன் என்ற பரமேஸ்வரன்**

காரைக்கால்.

# வாழ்த்துரை

மாஸ்டர் சி.வி.வி நமஸ்காரம்!

மாஸ்டர் குருதேவ் பிரபாகர சாஸ்திரியார் நமஸ்காரம் !!

கும்பகோணம் மாஸ்டர் சி.வி.வி. யோகா ஸ்கூல் மித்திரர் மாஸ்டர் ஆசிப்பெற்ற காரைக்கால் திரு. ஆர். என். ஈஸ்வரன் அவர்கள் அரசியலிலும் ஜோதிடத்திலும் சி.வி.வி.யோக மார்க்கத்திலும் சிறுவயதிலிருந்து வருகிறார். எந்த மனிதர்களுக்கும் மனதளவில்கூட தீங்கு நினைக்காத பண்பாளர். அவர் தொகுத்து வெளியிட்டுள்ள அதீத நூதன யோகம் என்ற ஒரு அருமையான நூலைப் படித்துப்பார்த்தேன். உலகங்களை உள்ளடக்கிய பிரம்ம ஆற்றலே இப்பிரபஞ்சத்தை வழிநடத்துகிறது. அதனுடைய தொடர்விளைவுகளே அதனுள் அமைந்த , நட்சத்திர மண்டலங்களையும், கோல்களையும், அதில் வாழும் உயிரினங்கள் சாஸ்வத தன்மை இல்லாத நிலையையும் பினி, மூப்பு, மரணம் நீங்கிய வாழ்வு வாழவேண்டும் என்ற மாஸ்டர் சி.வி.வி. அவர்களின் கொள்கைகளையும் லட்சியங்களையும் நமது யோக நெறிகளையும் பல்வேறு யோகக் குறிப்புகளிலிருந்து எடுத்து அதற்கு முன்னுரை அருமையாக வழங்கி அதைப்பற்றியும் இந்நூலில் ஆழ்ந்த ஆராய்ச்சியோடு தொகுக்கப்பட்டிருக்கும் இந்த நூல் புதிதாக மாஸ்டர் யோகம் பயிலும் அனைவருக்கும் இது ஒரு சிறந்த வழிகாட்டியாகும்.

மாஸ்டர் சி.வி.வி சேவையில்,

திருச்சி கே. கணேசன்
கெமிக்கல் இன்ஜினியர் (Rtd.)
இந்திய அரசு பாதுகாப்பு அமைச்சகம்,தளவாட உற்பத்தி தொழிற்சாலை.
நெ. 9/1,பிளாட் எண், 56. திருவள்ளுவர் தெரு, ஐயப்பா நகர், திருச்சி.
செல் : 99442 82772

# மாஸ்டர் சி.வி.வி அவர்களின் வாழ்க்கைக் குறிப்பு

மாஸ்டர் சி.வி.வி அவர்கள் 1868 ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 4-ம் தேதி புண்ய க்ஷேத்திரமாகிய கும்பகோணத்தில் காவேரி பகவன் கட்டத்திற்கு அருகில் திரு. குப்புசாமி அய்யருக்கும் திருமதி. கம்மம்மாவுக்கும் புத்திரனாக அவதரித்தார். குழந்தைப் பருவத்திலேயே குழந்தையில்லாத பெரும் செல்வந்தராக இருந்த அவரது அத்தை சுப்பம்பாள் அவர்கள் இக்குழந்தையை தத்து எடுத்துக்கொண்டார். இந்த குழந்தைக்கு வீர வெங்காசாமி என்ற நாமம் கொடுக்கப்பட்டு கன்சுபடி என்ற குடும்பப் பெயர் சேர்க்கப்பட்டு சி.வி.வி என்று மூன்று எழுத்துக்கள் பெயரின் முதல் அக்ஷரங்களாக அமையப்பெற்றது. மேற்படி வெங்கடராவ் என்பவருடைய மூதாதையர்கள் நியோகி வம்சத்தை சேர்ந்தவர்கள். விஜயநகர சாம்ராஜ்ய ஆட்சி காலத்தில் ஆந்திரப் பிரதேசத்திலிருந்து தமிழ் நாட்டுக்கு வந்து குடியேறியவர்களாவர். ஐந்தாம் வயதிலேயே உபநயனம் செய்யப்பட்டு பிரம்மோபதேசம் செய்யப்பட்டது. பிறகு கும்பகோணத்தில் ஆரம்ப பாட சாலையில் படித்த பின்பு தனது மேல்படிப்பை ஸ்ரீரங்கத்தில் முடித்துக் கொண்டார். 12 வயதிலேயே ருக்மணி என்ற பெண்ணை மணந்து கொண்டு பின்பு முறையே இல்லறம் மேற்கொண்டார். அவர் 18 வயதிற்குள் தமிழ், ஆங்கிலம், தெலுங்கு, சமஸ்கிருதம் ஆகிய மொழிகளில் தேர்ச்சி பெற்று யோக ஞானத்திலும் யோக பயிற்சியிலும் வல்லவரானார். தத்தெடுத்துக் கொண்ட சுப்பம்மாள் கணவர் திரு. வெங்கடராவ் அவர்கள் பெரும் செல்வந்தராய் இருந்ததால் அவருடைய குடும்ப வாழ்வு சகல சுகபோகங்களோடு கோலாகலமாகவும், குதூகலமாகவும் இருந்து வந்தது. எனினும் இளமை முதலே தெருவில் ஏதும் பிணம் எடுத்துச் செல்லப்படும் போதெல்லாம் இவருக்கு மரணத்தைப் பற்றிய சிந்தனை ஏற்பட்டு திண்ணையில் தனியாக அமர்ந்து கண்ணீர் விட்டு அழுவாராம். இதன் காரணமாக மரணத்திலிருந்து விடுதலை பெறுவதற்கான வழிமுறைகள் கண்டுபிடிப்பதில் ஆர்வத்தோடு ஈடுபட்டு வந்தார். இந்த நிலையில்

அவரது 36 ஆம் வயதில் 3 ஆண் குழந்தைகளுக்கும் 3 பெண் குழந்தைகளுக்கும் தாயாரான மனைவி ருக்மணி அம்மாள் அகால மரணமடைய நேரிட்டது.

இதன் காரணமாக மரணத்திலிருந்து விடுதலை பெறுவதற்கான வழிமுறைகளைக் கண்டறிவதில் மேலும் தீவிரமாக ஈடுபடலானார். அவர்கள் தனது 38-ம் வயதில் திருமதி. வெங்கம்மா அவர்களை மணம் புரிந்து கொண்டார். மேற்படி வெங்கம்மா அவர்களுடைய ஆன்மா பரிபக்குவ நிலைபெற்று விளங்கிய காரணத்தால் இவருடைய ஆன்மீக ஆராய்ச்சியும் யோக தேர்ச்சியும் திருமணத்திற்குப் பிறகு மேலும் சிறந்தோங்கியது.

மாஸ்டர் ஆன்மீக சம்பந்தமான விஷயங்களை எல்லாம் தெரிந்துக் கொண்டு எல்லா சக்திகளையும் அடைந்தார். பிரம்மத்திலிருந்து வந்த ஒரு அணுவிற்கு தாது , தாவரம், விலங்கு (Mineral, Plant, Animals) என்று பரிணமித்து மானுட உருவத்தை தந்தது எதுவோ அதற்கு Etheric ஸ்டேட் ( சூனிய ரூபம்) என்று சொல்வர். இதனையே ஜோதி ஸ்வரூபம் என்றும் சிருஷ்டி செய்யக்கூடிய சகுண பிரம்மம் என்றும் சொல்வார்கள். மாஸ்டர், உலோக, விருக்ஷ, விலங்கு வர்க்கத்தில் அடையவேண்டிய ஜென்மங்களை அடைந்து பின் மானுட ஜென்மத்திற்கு வந்த உடனே ஞானத்தை அடைந்து ஈதரிக் ஸ்டேட் என்பதன் அனைத்து சக்திகளையும் அறிந்துக்கொண்டு அந்தவிதமான சக்திகளையும் ஸ்தூல தேகத்திலேயே அடையவேண்டும் என்ற நோக்கத்துடன் முதலில் மனுஷ ஜென்மத்தை அடைந்தார். அந்த நோக்கத்தை விடாமல் அது முதல் பிரயத்தனம் செய்துக்கொண்டே வந்து, இந்த ஜென்மத்தில் ஈதரிக் ஸ்டேட்டின் எல்லா சக்திகளை அடைந்து சிருஷ்டிக் கிரமத்தை தெரிந்துக் கொண்டார். இதுவரை யாரும் ஸ்தூல தேகத்தில் இல்லாவிட்டாலும் சூக்ஷமத்தில் கூட இந்த கேஷியஸ் ஸ்டேட்டை பார்க்கவும் அதன் சக்திகளை அறிந்து கொள்ளவும் இல்லை. மாஸ்டர் பிரம்ம சொரூபமாக இருந்ததால் முதல் மானுட ஜென்மத்திலேயே ஈதரிக் (கேஸியஸ்)ஸ்டேட்டின் சக்திகளை ஸ்தூல தேகத்திலேயே அடையவேண்டும் என்ற நோக்கத்துடன் பிறந்து வந்து, அப்படியே விடாமல் சாதனை செய்து வந்து இந்த ஜென்மத்தில் வெற்றி அடைந்தார்.

மரணத்தை முற்றிலும் ஒழிப்பதென்றால் அதற்கு பிறப்பு - இறப்பு சம்மந்தப்பட்ட இரகசியங்களை உள்ளபடி தெரிந்து கொள்ளவேண்டுமென்று உணர்ந்தார்.

ஒரு குழந்தை கருப்பையில் வளரும் போதுதான் இதைத்தெரிந்து கொள்ளமுடியும் என்று உணர்ந்து, சிருஷ்டி பிரம்மத்தின் அனுமதி பெற்று கிரகங்களின் பாதிப்புக்கு உட்படாமல், தனது குமாரனான சந்து தாது (உலோகம்), விருக்ஷ, விலங்கு வர்க்கத்தை அனுபவித்து மானுட ஜென்மத்திற்கு வருவான் என்று தெரிந்துக்கொண்டு அண்டமாக இருந்த சந்துவின் ஈதரிக் (கேஷியஸ்) ஸ்டேட்டையும், பிண்டமாக இருந்த தன்னுடைய ஈதரிக் (கேஷியஸ்) ஸ்டேட்டையும் பரிசீலித்து இரண்டிலும் இருந்த பேதங்களையும், சிருஷ்டியிலிருந்த குறைகளையும் அறிந்து இந்த சிருஷ்டி தர்மத்தை மாற்றம் செய்ய முயற்சி செய்துக்கொண்டே இருந்தார். மனிதன் தான் ஜென்மத்திற்கு வருமுன் ஒரு அணு ரூபத்தில் தந்தையின் மிமோரண்டத்தில் (Memorandum) நுழைந்து அந்த தந்தையின் சரீரத்தில் சம்பூர்ணமாக வியாபகம் அடைய ஒரு மாதம் ஆகும். அதற்குப் பிறகு தாயின் கர்ப்பத்தில் பிரவேசம் அடைய கூடுதலாக இரண்டு மாதம் பிடிக்கும். ஆகமொத்தம் 3 மாதம் அந்த அணு புருஷ கர்ப்பம் அடையும். நூதன சிருஷ்டி ஏற்படுத்த மாஸ்டர் நிற்குண பிரம்மமாக இருந்ததால் சிருஷ்டி செய்ய சகுண பிரம்மம் தேவைப்படுவதால் மனுஷ ஜென்மத்திற்கு வந்துகொண்டே இருந்த அண்டத்தை கிரகங்களுக்கு தெரியாமல் வால் நட்சத்திரம் மூலமாக தன்னுள் பிரவேசம் செய்வித்து தனக்குள் கிரகித்துக் கொண்டு அந்த அண்டம் தாய் தந்தையிடமிருந்து எதையும் எடுத்துக் கொள்ளாமல் தானே குண்டலினி மூலமாக சுதந்திரமாக வேண்டிய எல்லாவற்றையும் சம்பாதித்துக் கொண்டு ஜென்மம் எடுக்க வேண்டும் என்று ஆணையிட்டார். நாம் ஜென்மம் அடையும்பொழுது தந்தையினால் பிராண கலை, ஸ்டெபிலிடி, சூட்சுமம், சரீரம் ஆகியவற்றையும் தாயினால் ஸ்தூல சரீரம் முதலானவற்றையும் அடைந்து ஜென்மம் எடுக்கிறோம்.

"சந்து" மாஸ்டர் ஆணைப்படி தாய் தந்தை மூலம் எதையும் அடையாமல் ஜென்மம் அடைந்தான் அன்னை வெங்கம்மா கர்ப்பம் அடைந்தவுடனேயே அவருடைய லிங்க சரீரம், ஸ்டெபிலிடி, மெமரி என்ற மூன்றையும் வேறுபடுத்தி

ஸ்தூல சரீரத்திலேயே ஒரு பக்கத்தில் வைத்து, ஸ்தூல பிரக்ஞை (உணர்வு) கெடாமல், வெங்கம்மாவிற்கும் அவரின் உள்ளே உள்ள பிண்டத்திற்கும் தேவையானவற்றை மாஸ்டர் (Treatment) ட்ரீட்மெண்ட் - சிகிச்சை மூலம் கொடுத்து போஷித்து வந்தார். உள்ளே இருந்த பிண்டம் அனைத்து அவயங்களுக்கும் முழுமையாக அடைந்த பிறகு அக்குழந்தை கருப்பையை விட்டு 13-04-1909 அன்று வெளிவந்ததும் தன் உயிரின் ஒரு நுண்பகுதியை பிரித்துக் கொடுத்து அந்த குழந்தையை உயிர்பெற்று வாழும்படி செய்தார். சந்து என்ற நாமகரணமிடப்பட்டு வாழ்ந்த அந்தக் குழந்தை மிக வேகமாக வளர்ந்து 6 மாதத்திற்குள்ளாகவே 3 வயது குழந்தைக்கு சமமாக வளர்ச்சிப்பெற்று, பெரியவர்கள் போல் பேசவும் உண்ணவும் ஆரம்பித்துவிட்டது. அது தன் தகப்பனார் மடியில் அமர்ந்து அவரைப்போல் குவளையில் மோர் சாப்பிடுவதை அவரது பாட்டியார் பார்த்துவிட்டு ஆச்சரியமடைந்தாராம். மேலும் அக்குழந்தையோடும் மாஸ்டரோடும் மகரிஷிகள் முனிவர்கள் நீண்ட தாடி உடையவர்களாய் பேசிவிட்டுப் போவதைப் பார்த்து அந்த அம்மையார் பயந்து அறைக்கதவை அவ்வப்போது மூடிவிடுவாராம். இந்தப்படி அக்குழந்தை அதிசய தெய்வீக குழந்தையாக வளர்ந்து வந்தது.

1910 ம் ஆண்டு ஹாலிஸ் காமெட் பூமியை வலம் வந்து கொண்டிருந்த சமயம் ஒருநாள் நள்ளிரவு இடி மின்னலுக்கும் மேலான பிரகாசம் பொருந்திய ஒரு பேரொளி மாஸ்டர் வீட்டுக் கூரையைப் பிளந்து கொண்டு உள்ளே நுழையக்கண்ட அருகிலுள்ள மக்கள், மாஸ்டர் வீட்டில் ஏதேனும் இடிதான் விழுந்து விட்டதோ என்று காண ஓடிவந்து பார்த்தபோது, மாஸ்டர் அவர்கள் கண்கூசும் விதத்தில் சிகப்பொளி (Aura) முழுமையாக சூழ்ந்த ஒரு அறையில் தியானத்தில் அமர்த்திருக்கக்கண்டு, அதிசயித்து என்ன நேர்ந்ததென்று கேட்க என்னுடைய யோக மார்க்கத்தில் ஒத்துழைப்பு தர கிரகங்கள் ஒப்புக் கொண்டதன் அறிகுறியே இந்த ஒளிப்பிழம்பு என்று பதில் அளித்தாராம். இந்த பேரொளியின் பிரகாசத்தை நேரில் பார்த்த மக்கள் மிகவும் பிரம்மித்துப் போனார்களாம். இதே சமயத்தில் 1910 மே மாதம் 27-ம் நாள் குழந்தை சந்துவுக்கு வாந்தியும் காக்கா வலிப்பும் ஏற்படவே மாஸ்டர் உடனடியாக சிகிச்சையளிக்க அது கொஞ்சம் தனிந்ததாம். ஆனால்

அடுத்த மறுநாளும் அதே மாதிரி நிகழவே சிகிச்சையளித்து சுகப்படுத்தினாராம். எனினும் அடுத்த நாளும் மூன்றாம் முறையாக அதே மாதிரி வலிப்பு ஏற்படவே கவலை கொண்டு, சிருஷ்டி கர்த்தரிடமே இந்த குழந்தைக்கு பிராணன் கேட்டால் என்ன? என்ற யோசனை வந்து, அருகிலிருந்த நண்பர் சுந்தரம் என்பவரை அழைத்து சிருஷ்டிப்பிரம்மத்திடம் சென்று, பிராணன் வாங்கி வரும்படி டிரான்ஸில் (Trance) அருந்துயிலில் அனுப்பினாராம். அவர் டிரான்ஸில் மேலே சென்று ஏழ கட்டங்களைத்தாண்டி எட்டாம் கட்டத்தில் மாஸ்டரைப் போன்ற உருவத்துடன் நீண்ட வெண்தாடியோடு அமர்ந்திருந்த ஒரு மகானைக்கண்டு மாஸ்டர் பிராணன் கேட்டு வாங்கி வரச் சொன்னார் என்று தான் வந்த காரணத்தை தெரிவிக்க, உடனே கொடுக்கப்பட்டது என்ற உத்திரவு வந்ததாம். அவர் மகிழ்வோடு திரும்பி வந்து குழந்தையை தடவிக் கொடுக்கவே குழந்தையின் வலிப்பு நீங்கிவிட்டதாம். குழந்தை பிழைத்துக் கொண்டதென எல்லோரும் சந்தோஷப்பட்டார்களாம். இந்த நிகழ்ச்சி நடந்தது 1910 ஆம் ஆண்டு மே மாதம் 29-ம் தேதி முன் இரவாகும்.

சிருஷ்டி கர்த்தரிடம் பிராணன் கேட்ட சுந்தரம், குழந்தை சந்துவுக்கு பிராணன் வேண்டுமென்று குழந்தையை குறிப்பிட்டுக் கேட்காமல், மாஸ்டர் பிராணன் கேட்கிறார் என்று பொதுவில் கேட்டதால், மாஸ்டர் அதிர்ஷ்டவசமாக தன் பாதுகாப்பில் அளவற்ற பிராணன் வந்து சேர்ந்துள்ளதை மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொண்டு, மேற்படி பிராண அலைகளை உபயோகித்து பூலோக மக்களின் நோய் நொடிகளைப் போக்குவதோடு, இதே பிராண அலைகளைக் கொண்டு மரணத்திலிருந்து விடுதலையும் அளிக்க இயலும் என்று உணர்ந்தார். எனவே பரிட்சார்த்தமாக இதற்கோர் வழிமுறை வகுக்க நினைத்து, பிருக்த ரஹித தாரக ராஜயோகம் என்ற யோகமுறையை ஏற்படுத்தி, அன்று இரவே, தான் குழந்தை சந்து, மாணாக்கர் சுந்தரம், மனைவி வெங்கம்மாள், மகன் வெங்கடராவ் இவர்களை சாதகர்களாகப் பதிவு செய்து, யோகாலய மித்ர சங்கத்தை தோற்றுவித்தார். பிறகு சந்து மாஸ்டரைப் பார்த்து நான் இங்கு இனியும் இருந்தால் சிருஷ்டி நின்றுவிடும் எனவே என்னைப் போகவிடுங்கள் என்று கோரினார். சந்து சிருஷ்டி செய்யவேண்டிய சகுண பிரம்மமாக இருப்பதால் மாஸ்டர் சந்துவை மேலுக்கு அனுப்ப

சரி என்றும் சந்துவிற்காக என்று பிராணன் கேட்கப்படாததால் அக்குழந்தை 1910 ஆம் ஆண்டு ஜுன் மாதம் 10-ம் தே சிருஷ்டி பிரம்மத்தோடு ஐக்கியமாகிவிட்டது.

மாஸ்டர் அவர்கள் இந்த பிராண சக்தியை உபயோகித்து பல நோயாளிகளுக்கு சிகிச்சை அளிக்க முற்பட்டபோது, பல தீராத நோய்கள் கூட விரைவில் குணமடையக் கண்டார். இதனால் இந்த அபூர்வ சக்தியை நேரில் அனுபவித்து குணமடைந்த பலர், யோகத்தில் சேர விருப்பம் தெரிவிக்கவே, அவர்களையும் யோகத்தில் சேர்த்து தீட்சை அளித்து வந்தார். இப்படியாக 1910 மே மாதம் முதல் 1922 ஜுன் 12-ந் தேதி வரை சுமார் 750 மித்திரர்கள் சேர்க்கப்பட்டார்கள்.

இந்த நூதன யோக வழியில் வேலை செய்யும் பிராண சக்தி, சூரிய மண்டலத்திற்கும் திருமூர்த்தி கட்டத்திற்கும் அப்பாலிலிருந்து பிரபஞ்சத்திற்கும் அப்பாலிருந்த ஹாலிஸ் காமெட் மூலம் தனக்கு வந்ததையொட்டி இதை நேர் வழி Direct - Line - டைரக்ட் லைன் என்றும், பழைய யோக முறைகளுக்கு முற்றிலும் மாறுபட்டு ஆசனம், பிரணாயாமம், ஹடயோகம் ஆகிய எந்த முறைகளும் பின்பற்றப்படாமல், வெறும் அந்தர்முக தியானத்தோடு மட்டும் நிற்பதால், இதை நூதன யோகம் என்றும் கொள்ளலாம் என்றும் மாஸ்டரால் குறிப்பிடப்பட்டது.

மித்திரர்களின் யோக தேர்ச்சிக்கு ஏதும் தடை ஏற்படாமல் இருக்க, இவர் ஏழு கோள்களையும் ரெகுலேஷன் செய்து அவைகளின் ஒத்துழைப்பைப் பெற்றார். அந்த சமயத்தில் சுக்கிரன் ஒத்துழைக்க மறுப்பு தெரிவிக்கவே, மாஸ்டர் அதற்கு தண்டனை அளிக்கப்படும் என்று கூறியபோது, அப்படி தனக்கு தண்டனை அளித்தால், மாஸ்டர் அவர்கள் தன்னுடைய மருமகனையே அதற்காக பலிகொடுக்க நேரிடும் என்று பயமுறுத்தியும், மாஸ்டர் அவர்கள் சளைக்கவில்லை. தண்டனையளிக்கப்படுமுன் தன் மருமகனை அவர் தங்கியிருந்த ஊரைவிட்டு தன் இடத்திற்கு வந்துவிடும்படி கேட்டுக் கொண்டும் அவர் வராததால், மாஸ்டரின் தண்டனையைப் பெற்ற பிறகு, சுக்கிரன் ஒத்துழைப்பு தர சம்மதித்த போதிலும், தான் சொன்னபடி மருமகனின் உயிரை எடுத்துக்கொண்டது. இதிலிருந்து கோள்களுக்கும் மேலாக வேலை செய்யக்கூடிய மாஸ்டர் சக்தியும் அவரது தியாக செயலும் நமக்கு நிதர்சனமாக விளங்குகிறது.

# யோகத்தின் சிறப்பு அம்சங்கள்

ஆரம்பமும் முடிவும் இல்லாததும் உருவமற்றதும் ஆகிய ஒன்றே பிரம்மமென்று எல்லோருக்கும் தெரிந்திருக்கிறது. எங்கும் எப்பொழுதும் நிறைந்திருப்பவரும், குணங்களிலும் ஆற்றலிலும் எல்லைபற்றி இருப்பவரும் அவரைத் தவிர்த்து அவருக்கு அப்பாலாய் ஏதும் இல்லாததும் ஆகியவர் எவரோ அவரே பிரம்மம், எல்லா சக்திகளுக்கும் காரணமானதே அதுவாகும். அது மனோ வாக்குக்கு அப்பாற்பட்டது. ஏதும் தேவையில்லாதது. எல்லாம் நிறைந்தது. மேலும் என்றும் குறைவற நிறைந்திருப்பது. ஆன்மாவே பிரம்மம் ஆகவே தன் ஆன்மாவை உணர்ந்து கொண்ட ஒருவன் தானே பிரம்மம் ஆகிறான். நமது ஆன்மாவின் உட்பொருளே பிரம்மம்தான். நீயே பிரம்மம் என்பதே சி.வி.வி வாக்காகும்.

இந்த உலக பரிணாம வளர்ச்சியில் படைக்கப்பட்டுள்ள யாவும் பிரம்மத்தையே மூலப்பொருளாக கொண்டுள்ளன. பிரம்மத்திலிருந்தே யாவும் வியாபகமாகி உள்ளன. எங்கும் பரந்தும் விரிந்தும் வியாபித்திருப்பது பிரம்மம் ஒன்றே.

படைக்கப்பட்டுள்ள இந்த உலகம், படைப்பாளியான, படைப்புக்கு மூலக்காரணமான பிரம்மத்திற்கு வேறுபட்டு, எங்கும் எல்லைக்கு உட்பட்டதாகவும் பல்வேறு ரூபங்களும் பல்வேறு குணங்கள் உடையதாகவும் தோற்றத்தில் காணப்படுகிறது என்றபோதிலும் படைக்கப்பட்டுள்ள இந்த பிரபஞ்சத்தின் வேறுபாடுகளுக்கு படைப்பாளியான பிரம்மந்தான் காரணம் என்றோ, அதன் தன்மையே மாறுபாடுதான் என்றோ கூறமுடியாது. எனினும் இந்த பிரபஞ்சம் பிரம்மத்தில் உள்ளடக்கம் பெற்றதுதான். அந்த பிரம்மமின்றி இந்த பிரபஞ்சமும் தோன்றியிருக்கமுடியாது. எனவே பிரபஞ்சமும் பிரம்மமும் ஒன்றென்றே கொள்ள வேண்டியுள்ளது.

ஆகவே இது (பிரபஞ்சம்) அதற்கு (பிரம்மத்திற்கு) மாறுபட்டதல்ல. பிரபஞ்சமும் அதிலுள்ள ஜீவன்களாகிய நாமும் இவை யாவும் பிரம்மமே என்ற மாஸ்டர் வாக்குப்படி நாம் எல்லோரும் பிரம்மமே ஆவோம்.

இந்த கருத்தை அடிப்படையாகக் கொண்டே யோகத்தின் மூலம் பிரம்மத்தை அறிந்துகொள்ளவும் அதோடு ஐக்கியப்படவும் ஒன்றுபடவும் முயற்சிக்கிறோம். தத்துவார்த்தப்படி மெய்ப்பொருள் ஒன்றாகத்தான் இருக்கவேண்டும். அதற்கு மாறுபட்டு இரண்டாவதாக மற்றொன்று இருக்கமுடியாது. ஆகவேதான் நாம் பிரம்மத்தை உணர்ந்து ஜீவன் முக்தர்களாக, அழிவில்லாத சாஸ்வத புருஷர்களாக, தேவையற்றவர்களாக சுதந்திரர்களாக ஆகமுடியும் என்று நம்பிவருகிறோம். எல்லையற்ற சர்வ சக்திவாய்ந்த பிரம்மத்தின் மத்தியிலேயே நாம் ஜீவிக்கிறோம். நடமாடுகிறோம், வாழ்ந்து வருகிறோம். எனவே நமது முயற்சிக்கேற்பவும் ஆர்வத்திற்கேற்பவும் அந்த பிரம்மத்தை உணர்ந்து கொள்ளவும் முடியும். இந்த பிரபஞ்ச வாழ்வின் காரணத்தையும், பிரபஞ்ச பரிணாம வளர்ச்சியின் உண்மை சரித்திரத்தையும் அறிய, பிரம்மத்தை உணர்ந்துகொள்ள நாம் எடுத்துக்கொள்ளும் முயற்சியை ஒட்டித்தான் அதை அறிந்து கொள்ளமுடியும்.

பல்வேறு வேறுபாடுகள் கொண்ட பிரபஞ்சமும் நாமும் எப்படி ஒன்றுக்கொன்று சம்மந்தப்பட்டு வாழ்ந்துவருகிறோம். என்பதற்கு ஒரு உதாரணத்தை பார்ப்போம். காற்றாக (நீராவியாக) திரவமாக (தண்ணீராக) கட்டியாக ( ஐஸ் கட்டியாக) மூன்று தன்மையில் தண்ணீர் பரிணமித்து வருவதைக் காண்கிறோம். ஆனால் இந்த மூன்றிலும் வியாபகமாயிருப்பது இரண்டு பங்கு ஹைட்ரஜனும் ஒரு பங்கு ஆக்சிஜனுமேயாகும். மேலும் முற்கால விஞ்ஞானிகள் எல்லா கூட்டுப்பொருள்களுக்கும் இரசாயனப் பொருள்களுக்கும் மூலமாயிருப்பது ஈதர் அல்லது விண் என்று கருதி வந்திருப்பதையும் காண்போம்.இதேபோல் படைக்கப்பட்டுள்ள சேதன-அசேதன (உயிருள்ள - உயிரற்ற) எல்லாவற்றிற்கும் அடிப்படைத் தத்துவமாயிருப்பது பிரம்மமே என்றும் கொள்ளலாம். நம்மைச் சூழ்ந்துள்ள பிரபஞ்சத்தில் காணப்படும் பொருள்களிடத்து காணப்படும் குண மாறுபாடுகளும் செயல் வேறுபாடுகளும் படைக்கப்பட்ட பொருள்களில் காணப்படும் மாறுபாடுகளே ஒழிய படைப்பிற்கு அடிப்படையான பிரம்மத்தின் இம்மாறுபாடுகள் வியாபித்திருக்க வில்லை.

படைக்கப்பட்ட பொருள்களிலிருந்து படைப்புக்கு காரணமான பிரம்மத்தை பிரித்தறியவேண்டிய பிரம்மத்தை பரமாத்மா என்றும் பரஞ்சோதி (ஒளிக்கெல்லாம் அப்பாற்பட்ட ஒளி) என்றும் பரப்பிரம்மம் என்றும் குறிப்பிடுகிறோம். ஒரே பரமாத்மாவின் பிரதி பிம்பங்களான பிற தனித்தனி ஆத்மாக்களை ஜீவாத்மாக்கள் என்றும் காலத்தாலும் இடத்தாலும் வேறுபட்டு காணப்படும் மற்ற எல்லாப் பொருள்களையும் பிரக்ருதி என்றும் குறிப்பிடுகிறோம். (ஆகாயம் தோன்றுவதற்கும் முற்பட்ட பிரபஞ்சப் பொருளையே ப்ருக்ருதி என்று இங்கு குறிப்பிடுகிறோம்.)

பரிணாம வளர்ச்சியின் மகா உன்னத உச்சநிலை படைப்பே மனித ரூபம். பரிணாம வளர்ச்சியின் அடுத்த கட்டத்தையடைய யோக சாதனமே முதற்படி என்பதும் படைப்பின் உச்சகட்டத்தை அடைந்துள்ள மனிதனே அதற்கேற்ற தகுதி பெற்றவன் என்பதும் இதனால் விளங்கும்.

**இனி மனிதன் என்பவன் யார்?** அவன் எப்படி உருவாக்கப்பட்டிருக்கிறான் என்பதை சற்றே கவனிப்போம். அவன் ஸ்தூலம், சூக்ஷமம், சூன்யம் என்ற மூன்று ப்ரக்ருதி கோசங்களால் கவரப்பட்ட ஜீவாத்மாவாக ஆக்கப்பட்டுள்ளான். இது பொதுவான மேலிடையான கருத்தாகும். இதில் ஸ்தூல கோசம் என்பது ஜீவாத்மாவின் மிகவும் கெட்டிப்பட்டதும் ஒருவனுடைய நடமாட்டத்திற்கும் செயலுக்கும் உபயோகப்படுத்தப்பட்டுவரும் கோசமாகும் - சரீரமாகும்.

இதுதான் அவனுக்கு உருவ அமைப்பைக் கொடுக்கிறது. ஜீவாத்மாவின் ஸ்தூல, சூக்ஷ்ம், மானசீக கோசங்களை முறையே தண்ணீரின் ஐஸ், நீர், ஆவி என்ற மூன்று நிலைகளுக்கு ஒருவகையில் ஒப்பிடலாம். சிருஷ்டியின் பரிமாண வளர்ச்சியில் பல்வேறு குணங்களையும் அமைப்புகளையும் வெளிப்படுத்தவற்கு ஏற்புடையதாகவே இந்த ஸ்தூல, சூக்ஷ்ம, மானசீக, கோசங்கள் ஒவ்வொரு மனித ஜீவனுக்கும் கொடுக்கப்பட்டுள்ளது. ஜீவாத்மாவின் உற்பத்திக்கு எது ஆதார அடிப்படையாகயிருந்ததோ அதே அடிப்படையிலிருந்து உற்பத்தியான அணுக்கூட்டங்களிலிருந்துதான் ஸ்தூல, சூக்ஷ்ம, மானசீக கோசங்களும் உற்பத்தியாகி உள்ளன. இதில் ஸ்தூலகோசம் மிகுதியும்

கெட்டிப்பட்டது. சூக்ஷ்மம் ஸ்தூலத்தைவிட சற்றே மென்மையானது. மானசீகம் என்பது சூக்ஷ்ம கோசத்தைக் காட்டிலும் மிகவும் மென்மையானது. ஆக இவை எல்லாமே ஆத்மாவை அடிப்படையாகக் கொண்டுவந்தவைதான். எல்லாமே ஆத்மாவின் ரூபம் தான். இவை ஆத்மாவைத் தவிர வேறில்லை.

இந்த ஜீவ அணுக்களின் கூட்டுச்சேர்க்கையின் அளவையும் பரிணாமத்தையும் ஒட்டியே இப்பிரம்மாண்டத்தில் பல்வேறு நிலைகளும் அதற்கேற்ப பல்வேறு உருவ அமைப்புகளும், பல்வேறு குணங்களும் செயலாற்றும் திறன்களும் தோன்றியிருக்கக் காண்கிறோம். ஆகவேதான் கீழ் நிலையிலுள்ள ஒரு கோசமானது தன் எல்லைக்குட்பட்ட குணங்களையும் செயல்களையும் மட்டுமே வெளிப்படுத்தி மற்ற மேலான தன்மைகளை வெளிப்படுத்த முடியாமல் தடைபட்டு நிற்கிறது. அந்தந்த நிலைக்கேற்ற குணங்களையும் செயல்திறனையும் வெளிப்படுத்துவதே பரிணாம வளர்ச்சி தத்துவத்தின் ஒழுங்குமுறையாய் இருந்துவருகிறது. ஆகவே ஸ்தூல கோசமானது தன் வரம்புக்கு உட்பட்டு மட்டுமே செயலாற்றி மற்ற மேல்நிலை ஞானங்களையும் செயல்திறனையும் வெளிப்படுத்த முடியாமல் தடையுற்றிருக்கிறது. இந்த ஒழுங்கு முறை இல்லாவிட்டால் இத்தனை வேறுபாடுகளையும் கூட்டமைப்பு களையும் நம்மால் காணமுடியாது. பல்வேறு உருவ அமைப்புகளையும் செயல்திறனையும் ஒட்டியே பிரபஞ்சம் பல்வேறு லோகங்களாக வரையறுக்கப்பட்டுள்ளது. மேலும் ஒவ்வொரு கீழ்நிலையும் அதன் மேல்நிலையின் ஆட்சிக்கும், கட்டுப்பாட்டிற்கும், உட்பட்டதாகவே இருந்துவருகிறது. மேல்நிலை என்பது அதனுடைய கீழ்நிலை வரம்பையே காட்டி நிற்கிறது.

கீழ்நிலையிலுள்ள ஒரு கோசமானது தனக்கு மேல் நிலையிலுள்ள (அதாவது தனக்கு உள்ளாக அமைந்திருக்கும்) கோசத்தின் ஞானத்தையும் செயல்பாட்டையும் தெரிந்துகொள்ள முடியாமலும், தெரிவிக்க முடியாமலும் இருக்கும் நிலையே இப்பிரபஞ்சத்தில் மாயை என்று கூறப்படுவதாகும். பிரபஞ்சத்தை மேலும் மேலும் வெளிப்புறமாக விரிவடையச் செய்வதே இம்மாயையின் வழிமுறையாகும். மேல்நிலையில் பெற்ற ஞானத்தை கீழ்நிலைக்கு வரும்போது கொண்டுவரமுடியாமல்

இருக்கும் இத்தடைதான் மேல்நிலைக்குச் சென்று, சமாதி நிலையில் தாம் பெற்ற ஞானத்தையும் அநுபவத்தையும் கீழ்நிலைக்கு வந்தபோது ஞாபகத்திற்கு கொண்டுவரமுடியாமலும் விளக்கிக்கூற முடியாமலும் இருப்பதற்கு முக்கிய காரணமாகும். அந்தந்த நிலை அநுபவத்தை அந்தந்த நிலையிலேயே விட்டுவிட்டு வந்திவிடவேண்டியிருக்கிறது.

இதனால்தான் சமாதி நிலையின்போது பெற்ற சக்திகளையும் ஞானத்தையும் கீழுள்ள ஸ்தூல நிலைக்கு வந்தபோது நினைவுக்கு கொண்டுவரமுடியாமலும் மேற்கொண்டு மேல்நிலையை அடைய அந்த ஞானத்தையும் சக்தியையும் உபயோகப்படுத்திக் கொள்ள முடியாமலும் இருந்துவருகிறது. சமாதி நிலைக்குச் சென்று அங்கு பெற்ற ஆனந்த நிலையிலிருந்து திரும்பி வந்ததும் பசி, தாகம், ஆசை, துக்கம், எப்போதும்போல் துன்புறுத்தவே செய்கிறது. எப்படி இந்த வாழ்வின் பயன்களை, தான் சம்பாதித்த உடைமைகளை ஒருவன் தன் மரணத்திற்குப்பின் தன்னுடன் கொண்டுசெல்ல இயலவில்லையோ அதுபோல் சமாதியில் தான் பெற்ற பயனையும் தன் ஸ்தூல வாழ்வில் பயன்படுத்திக் கொள்ள முடிவதில்லை.

பிரம்மம் எப்படி தன் சுய இச்சையாலேயே பிரபஞ்சமாக தானே விரிவடைய முற்பட்டது என்பதையும் தன்னுடைய மூல தத்துவங்களைக் கொண்டே சிருஷ்டி பரிணாம வளர்ச்சி படிப்படியாக மனிதன்வரை வளர்ச்சியடைந்துள்ளது என்பதையும் மனிதன் எப்படி மானசீகம், சூக்ஷமம், ஸ்தூலம் ஆகிய மூன்று கோசங்களையும் முறையே பெற்று வளர்ச்சியடைந்து வந்திருக்கிறான் என்பதையும் ஏற்கனவே கண்டோம். ஆனால் அவனுடைய வளர்ச்சி இதோடு முற்றுபெற்றுவிடவில்லை. மனிதனுடைய கட்டுமானத்தில் அவனுடைய ஜீவாத்மா முழுமையாக செயலாற்ற மேலும் பல தத்துவங்கள் தோற்றுவிக்கப்பட்டு வருகின்றன. இச் சிறுநூலில் அவற்றை எல்லாம் விளக்கிக்கூற இயலவில்லை.

தற்போது நமது ஜீவாத்மாவைக் கவனிப்போம். ஜீவாத்மா என்பது சுத்த பிரம்மத்தின் ஒரு அணுரூபமென்றும்

அது மேலே விவரிக்கப்பட்ட ஒன்றுக்கொன்று உள்ளடக்கி இருப்பதற்கான பல கோசங்களை தனது போர்வைகளாகக் கொண்டு இயங்கிவருகிறது என்றும் கொள்ளலாம்.

இந்த ஜீவாத்மா தன்னுள் பரமாத்மாவை உள்ளடங்கிய சக்தியால் திணிக்கப்பெற்ற ஒரு வித்திற்கு ஒப்பான அணுவென்றும் அது மூன்று தன்மைகளோடு வெளிப்புறத்தில் தனித்தன்மை பெற்று அப்பரமாத்மாவால் இயக்கப்பட்டு வருகிறதென்றும் கொள்ளலாம். இதை இன்று வழக்காற்றிலுள்ள திருமூர்த்தி கட்டத்தின் பிரதிபிம்பம் என்றும் கொள்ளலாம். இதையே யோக சித்தாந்தங்களில் குண்டலினி என்றும் (அதாவது ஒரு ஜீவனின் கருப்பொருள் என்றும்) உபநிஷதங்களில் கூறப்பட்டுள்ள அ-உ-ம் என்ற மூன்றெழுத்துக்களைக் கொண்ட ஓம் என்ற பிரணவத்தை குறிப்பதாகவும் கொள்ளலாம். மனிதனின் இந்த குண்டலினி மனோமயம், சூக்ஷமம், ஸ்தூலம் என்ற மூன்று கோசங்களைப் பெற்று தனித்தனி மனித ஜீவனாக விளங்குகிறது. இந்த மனிதனிடம் பிரம்மத்தின் பரிசுத்தமான தன்மையை பரிமளிக்கும் பரமாணு சொரூபத்தையே அந்தராத்மா என்கிறோம். ஆதிப்பிரம்மத்திலிருந்து பிரிந்து வந்த இந்த அணுரூப ஜீவனே கீழிறங்கி வந்து பல்வேறு ஆதார நிலைகளுக்கேற்ப பல்வேறு கோசங்களால் மூடப்பட்டு முடிவில் ஸ்தூல கோசத்தைப் பெற்று இயங்கிவருகிறது. இக்காரணத்தால் பிரம்மத்தின் சக்தியை முழு அளவில் பரிமளிக்கச்செய்ய முடியாமல் வரம்புக்குட்பட்டதும் அளவோடும் கூடியதுமான சக்தியுள்ளதாய் இயங்கிவரக் காண்கிறோம். இதனால்தான் மனிதன் கர்ம பந்தத்திற்கு கட்டுப்பட்டவனாக கருதப்பட்டு வருகிறான். ஆகவேதான் இந்த கோசங்களின் காரணமாக உள்ள அளவுக்குட்பட்ட நிலையிலிருந்து தான் அநுபவிக்கும் பயம், துக்கம், செயலற்ற தன்மை கட்டுப்பாடு இவற்றிலிருந்து விடுபடவேண்டி இக்கோசகங்களை அழித்துவிட்டு தனது ஆதிநிலையை, இறைநிலையை, ஆதிபிரம்ம நிலையை, சர்வசக்தி நிலையை அடைய முயற்சி செய்ய விரும்புகிறான். இந்த விடுதலை முயற்சியின் முடிவைத்தான் பிரம்மத்தில் லயமாகி ஐக்கியமாகிவிடுவதென்றும் மோக்ஷமடைவதென்றும் உலக குருமார்கள் எல்லோராலும் பொதுவாக புரிந்து கொள்ளப்பட்டுவருகிறது.

ஆனால் இது தவரானது. நெருங்கி ஆராய்ந்து பார்க்கும்போது இதற்கான குறிக்கோளும் அதற்கான வழிமுறையும் ஆக இரண்டுமே இயற்கை பரிணாம வளர்ச்சிக்கு முரண்பாடான தென்றும் நேர்மாறான தென்றும் புரியவரும். ஒரு ரோஜா மலர் நான் சீக்கிரமே உதிர்ந்து அழிந்துவிடப் போகிறேன். ஆகையால் இந்த புதுமை, அழகு, வாசனை இவற்றால் எனக்கென்ன பயன்? எப்படியும் கூடிய சீக்கிரம் நான் உதிர்ந்து மடியத்தானே போகிறேன். என்னால் அதை தடுத்துக்கொள்ள முடியாத போது அந்த புதுமையும் அழகும் வாசனையும் எனக்கேன்? என்று நினைப்பதற்கே ஒப்பாகும். அதே புத்துணர்வும், அழகும் வாசனையும் தனக்கு நீங்காமல் நிலைத்திருக்க வேண்டும். தனக்கு அழிவே நேரக்கூடாது என்று நினைப்பதற்குப் பதிலாக இந்த புதுமையும், அழகும், வாசனையும் நிலையில்லாதவை, சீக்கிரமே மறைந்துப்போகக் கூடியவை. ஆகவே எனக்கு எந்த வகையிலும் உபயோகம் இல்லாதவை. எனக்கு விரும்பத்தகாதவை. இந்த நிலையை இப்போதே கைவிட்டு நான் தோன்றிவந்த இடத்திற்கே மீண்டும் சென்றுவிடுகிறேன் என்று அந்த ரோஜா மலர் நினைப்பது எப்படி சரியாக இருக்கும்? என்று சற்றே சிந்தித்துப் பாருங்கள்.

நாம் ஏன்? எப்படி? எதற்காக? இவ்வுலகத்திற்கு வந்திருக்கிறோம் என்பதை சிந்தித்து பார்க்காமல் நாம் வந்த இடத்தை, நம்மை சிருஷ்டிக்கு அனுப்பிய அதே ஆதிபிரம்மத்தை மீண்டும் சென்றடைய முயற்சிப்பது இந்த ரோஜா மலரின் நினைப்பிற்கே ஒப்பாகும். ரோஜா மலரானது மீண்டும் ஒரு மொட்டாக, மொட்டின் காம்பாக, காம்பின் கிளையாக மாறி கடைசியில் வேறைச் சென்று அடைய முடியுமானால் அப்போதும் அந்த வேறானது மீண்டும் அதே வழியில் கிளையாக, காம்பாக, மொட்டாக மலராக முடிவடையும்படி தான் அதை திருப்பி அனுப்புமேயொழிய ரோஜா மலரின் விருப்பத்தை ஏற்றுக்கொண்டு அதை தன்னுடன் ஐக்கியப்படுத்திக் கொள்ளாது. இப்படித்தான் பிரம்மத்தை சென்றடையவற்கான நமது முயற்சியும் நம்முடைய மறுபிறப்புக்கு வழியாகுமேயொழிய அந்த முயற்சியால் நமக்கு விடுதலைகிட்டாது. நமது சிருஷ்டியின் ஆரம்ப இடமாகிய பிரம்மத்தைச் சென்றடையவதே முத்தி அல்லது மோக்ஷம் என்று நினைப்பது நமது மறுபிறப்புக்கு வழிகோலுமே ஒழிய நமது பிறவிக்கு

அது முடிவுகட்டாது. இது ஒரு நேர்மாறான விளைவை தரக்கூடிய தோல்வி மனப்பான்மையே ஆகும். உலக வாழ்வு பயனற்றது என்று கருதும் இந்த தோல்வி மனப்பான்மை ஒருபோதும் முக்தியாகாது.

முக்தி என்பது இந்த பூலோக வாழ்விலேயே இந்த ஸ்தூலத்திலேயே அடையவேண்டிய ஒரு நற்பயனாகத்தான் இருக்கவேண்டும். இந்த பூலோக வாழ்வு துக்கமும், துன்பமும் நிறைந்தது,பயனற்றது என்று கருதி மீண்டும் தான் வந்த இடத்திற்கே சென்றடைவதுதான் மோக்ஷம் என்று நினைப்பது பரிணாம வளர்ச்சியின் படைப்பாகிய நாம், நம்மைப்படைத்த சிருஷ்டிகர்த்தாவைக் காட்டிலும் அறிவாளிகள் என்றும் உலக வாழ்வு பயனற்றது என்று கருதுவது நியாயமே என்றும் நாமே முடிவுகட்டிக் கொள்வதாகும். நாம் யார்? நாம் ஏன் இவ்வுலக வாழ்விற்கு அனுப்பப்பட்டிருக்கிறோம்? நம் குறிக்கோள் எதுவாக இருக்கவேண்டும்? என்று நாம் முற்றிலும் அறிந்து கொள்ளாமலே இருந்து வருகிறோம் என்பதையே இது காட்டும். நமக்கு ஏன் இந்த சரீரங்கள் (கோசங்கள்) கொடுக்கப்பட்டிருக்கின்றன? அவற்றை எப்படி நாம் பயன்தரும் வகையில் உபயோகிப்பது, செயலாற்றும்படி செய்வது? என்பதை சிந்தித்து அறிந்து கொள்வதே நமது முயற்சியாக இருக்கவேண்டும். இந்த உலகத்தையும் நம்மையும் படைத்திருப்பது எல்லாம் அறிந்த படைப்பாளியின் தவறுதலாக இருப்பதற்கில்லை. நமது படைப்பைப் பற்றிய எந்த இரகசியத்தையும், உண்மையையும் அறியாத நாம், நமது படைப்பாளியால் நமக்கு கொடுக்கப்பட்டுள்ள மானசீக, சூக்ஷ்ம, ஸ்தூல கோசங்களை அழித்துக் கொண்டு - கரைத்துக் கொண்டு நமது ஆரம்பநிலையை, நம்மைப் படைத்தவனை அடைந்து அவனோடு ஐக்கியப்படுவது சாத்தியமே என்று கொண்டாலும் அதனால் நாம் சாதிக்கப்போவது என்ன? அதனால் நமது கர்மவினை மேலும் அதிகப்படத்தானே செய்யும்? பரிணாம வளர்ச்சியின் உச்சகட்டத்தை அடைந்துள்ள மானிட பிறப்பைப் பெற்ற நீ உன்னை அழித்துக்கொள்வதன் மூலம் உன் பிறப்பின் மகத்துவதற்கு என்ன மதிப்பு தருவதாகக் கொள்ளமுடியும்? சற்றே சிந்தித்துப் பாருங்கள். நம்மை நாமே கரைத்துக் கொள்வதன்மூலம்

நமது கர்மாவை உலக சிருஷ்டியாம்சத்தில் கரைத்து விடுவதால் நாம் என்ன நற்பயனை அடைந்தவர்களாவோம். இதையும் நாம் சிந்தித்தாக வேண்டும்.

பரிணாம வளர்ச்சியின் போக்கை நம்மால் தடுத்து பின்னோக்கிச் செல்லும்படி செய்யமுடியும் என்று நாம் நினைப்பது நமது முட்டாள்தனத்தையும் அர்த்தமற்ற அகந்தையையுமே காட்டும். மாறாக பரிணாம வளர்ச்சியின் முடிவான குறிக்குகோளை மதித்து அதற்கு உடன்பட்டு வாழ்ந்து மாஸ்டர் சங்கல்பத்தை முடித்துவைப்பதே நமது குறிக்கோளாக இருக்கவேண்டும்.

ஆதிப் பிரம்மத்தோடு கலந்து கரைந்துவிடவேண்டும் என்பதற்காக சிலர் தேகப்பயிற்சி முறையை ஹடயோகத்தை கையாளுகிறார்கள். மற்றும் சிலர் யோகாசனம், பிராணாயாமம் (மூச்சிப்பயிற்சி) உபாசனை (தனக்கு விருப்பமான தெய்வத்தின் நாமத்தை ஜபித்தல்) முதலிய பல்வேறு யுக்திகளை கையாளுகிறார்கள். தமது தெய்வபக்தியின்மூலமும், தவத்தின்மூலமும் மக்களின் மரியாதையைப் பெற்றவர்கள் சிலர் அவர்களது மறைவிற்குப் பிறகு முக்தியடைந்தவர்கள் என்றும், யோகிகள் என்றும், மகாத்மாக்கள் என்றும் போற்றப்பட்டு வரக்காண்கிறோம். ஆனால் அவர்களது மறைவிற்குப்பின் அதாவது மரணத்திற்குப்பின் அவர்கள் அடைந்துள்ள நிலை என்னவென்று நம்மில் யாருக்குமே தெரியாது. ஆகவே பிரம்மத்தில் ஐக்கியமாகிவிடுதல் சாத்தியமில்லை என்று நாம் ஏற்கனவே விளக்கியுள்ளபடி அவர்கள் மீண்டும் மனித பிறவி எடுத்திருக்கவேண்டுமென்றே அநுமானிக்க வேண்டியிருக்கிறது.

பரமாத்மாவும் ஜீவாத்மாவும் அடிப்படையில் என்றும் ஒன்றுபட்டே இருப்பதால் ஒன்றுக்குள் ஒன்று கரைந்து-போவதென்கிற சாதனத்திற்கே இடமில்லை. இது அவசியமில்லை. நீர்த்துளியானது ஆவியாக மேகமாகி மழையாகி சமுத்திரத்தோடு ஐக்கியமாவதுபோல் ஜீவாத்மாவானது மேல்நோக்கிச் சென்று அதி உச்சியிலுள்ள பரமாத்ம நிலையுடன் கலந்து கரைந்துபோவற்கான சாதனம் எந்த வகையிலும் யோக சாதனம் ஆகாது. மாறாக பரமாத்மாவின் சக்திகள் யாவற்றையும்

கீழே கொண்டுவந்து நமது ஜீவாத்மாவுக்குள் பரிமளிக்கச் செய்வதே உண்மையான யோக சாதனமாக இருக்கும். நமது கர்ம பந்தமோ, அந்த பந்தத்திலிருந்து விடுபட்டு சுயேச்சை அடையவேண்டுமென்ற நமது முயற்சியோ, அம்முயற்சியால் நாம் பெறக்கூடிய விடுதலையோ முக்தியோ, நமக்கு உள்ளே வீற்றுள்ள பரமாத்மாவை எந்த வழியிலும் பாதிப்பதற்கில்லை. ஏனெனில் ஜனன மரணத்திற்கு உட்பட்டிருப்பதும் கர்மபந்தத்தில் கட்டுண்டிருப்பதும் க்ஷரபுருஷனாகிய ஜீவாத்மாவே ஒழிய அக்ஷரபுருஷன் என்று கருதப்படும் பரமாத்மன் அல்ல.

அக்ஷரபுருஷன் என்பது மகாபுருஷன் என்பதன் ஒரு கதிர் அல்லது பிரதிபிம்பமே ஆகையால், பந்தமோ விடுதலையோ அதற்கில்லை. குறைகள், தேவைகள், பிறப்பு, இறப்பு, பிணி, மூப்பு, சுகம், துக்கம் இவை யாவற்றையும் அனுபவித்து வருவது ஜீவாத்மாவேயாகும். அந்த ஜீவாத்மா எந்த இடத்தில் இவற்றை அநுபவிக்கிறதோ அதே இடத்தில்தான், ஆக இந்த பூலோக வாழ்வில்தான் இக்குறைகள் நீக்கப்பட்டதாக வேண்டும். நம்மை பாதித்து நிற்கும் இக்குறைபாடுகளிலிருந்து நாம் விடுதலையடைய ஒரேவழி பரமாத்மாவினிடம் விளங்கி நிற்கும் சகல ஆன்மீக சக்திகளையும் நமது ஜீவாத்மாவுக்குள் பாய்ந்து பரிமளிக்கும்படி செய்வதுதான். இதற்கான சாதனையையே முயற்சியையே யோக சாதனை என்று அழைக்க முடியும்.

பரமாத்மீகத்தன்மை நமக்குள் புகுந்து மரணத்திற்கும் துக்கத்திற்கும் ஆட்பட்டுள்ள ஸ்தூலவாழ்வை மரணமற்ற அழியாத இன்ப சுக வாழ்வாக மலரச் செய்வது தான் முக்தி அல்லது மோக்ஷமாகும். நமது சிருஷ்டிக்கு காரணமான பரமாத்மாவின் சக்திகளை நாம் பெற்று, அழிவிலிருந்து நீங்கி, அழியாமை பெற்று விளங்க வேண்டுமென்பதற்காகவே இயற்கையானது பல்வேறு கோசங்களை நமக்கு கடனாக அளித்துள்ளது. யோக சாதனைமூலம் வேண்டிய பக்குவத்தை, தேர்ச்சியை நாம் அடைந்ததும், பரமாத்மாவின் சக்திகள் தாமே நமது ஜீவாத்மாவுக்குள் பாய்ந்து அழியாமையையும் பேரின்பத்தையும், கூட்டித்தரும். அத்வைதசித்தி என்பது மகா புருஷனுடைய

நமது கர்மாவை உலக சிருஷ்டியாம்சத்தில் கரைத்து விடுவதால் நாம் என்ன நற்பயனை அடைந்தவர்களாவோம். இதையும் நாம் சிந்தித்தாக வேண்டும்.

பரிணாம வளர்ச்சியின் போக்கை நம்மால் தடுத்து பின்னோக்கிச் செல்லும்படி செய்யமுடியும் என்று நாம் நினைப்பது நமது முட்டாள்தனத்தையும் அர்த்தமற்ற அகந்தையையுமே காட்டும். மாறாக பரிணாம வளர்ச்சியின் முடிவான குறிக்குகோளை மதித்து அதற்கு உடன்பட்டு வாழ்ந்து மாஸ்டர் சங்கல்பத்தை முடித்துவைப்பதே நமது குறிக்கோளாக இருக்கவேண்டும்.

ஆதிப் பிரம்மத்தோடு கலந்து கரைந்துவிடவேண்டும் என்பதற்காக சிலர் தேகப்பயிற்சி முறையை ஹடயோகத்தை கையாளுகிறார்கள். மற்றும் சிலர் யோகாசனம், பிராணாயாமம் (மூச்சிப்பயிற்சி) உபாசனை (தனக்கு விருப்பமான தெய்வத்தின் நாமத்தை ஜபித்தல்) முதலிய பல்வேறு யுக்திகளை கையாளுகிறார்கள். தமது தெய்வபக்தியின்மூலமும், தவத்தின்மூலமும் மக்களின் மரியாதையைப் பெற்றவர்கள் சிலர் அவர்களது மறைவிற்குப் பிறகு முக்தியடைந்தவர்கள் என்றும், யோகிகள் என்றும், மகாத்மாக்கள் என்றும் போற்றப்பட்டு வரக்காண்கிறோம். ஆனால் அவர்களது மறைவிற்குப்பின் அதாவது மரணத்திற்குப்பின் அவர்கள் அடைந்துள்ள நிலை என்னவென்று நம்மில் யாருக்குமே தெரியாது. ஆகவே பிரம்மத்தில் ஐக்கியமாகிவிடுதல் சாத்தியமில்லை என்று நாம் ஏற்கனவே விளக்கியுள்ளப்படி அவர்கள் மீண்டும் மனித பிறவி எடுத்திருக்கவேண்டுமென்றே அநுமானிக்க வேண்டியிருக்கிறது.

பரமாத்மாவும் ஜீவாத்மாவும் அடிப்படையில் என்றும் ஒன்றுபட்டே இருப்பதால் ஒன்றுக்குள் ஒன்று கரைந்து-போவதென்கிற சாதனத்திற்கே இடமில்லை. இது அவசியமில்லை. நீர்த்துளியானது ஆவியாக மேகமாகி மழையாகி சமுத்திரத்தோடு ஐக்கியமாவதுபோல் ஜீவாத்மாவானது மேல்நோக்கிச் சென்று அதி உச்சியிலுள்ள பரமாத்ம நிலையுடன் கலந்து கரைந்துபோவதற்கான சாதனம் எந்த வகையிலும் யோக சாதனம் ஆகாது. மாறாக பரமாத்மாவின் சக்திகள் யாவற்றையும்

கீழே கொண்டுவந்து நமது ஜீவாத்மாவுக்குள் பரிமளிக்கச் செய்வதே உண்மையான யோக சாதனமாக இருக்கும். நமது கர்ம பந்தமோ, அந்த பந்தத்திலிருந்து விடுபட்டு சுயேச்சை அடையவேண்டுமென்ற நமது முயற்சியோ, அம்முயற்சியால் நாம் பெறக்கூடிய விடுதலையோ முக்தியோ, நமக்கு உள்ளே வீற்றுள்ள பரமாத்மாவை எந்த வழியிலும் பாதிப்பதற்கில்லை. ஏனெனில் ஜனன மரணத்திற்கு உட்பட்டிருப்பதும் கர்மபந்தத்தில் கட்டுண்டிருப்பதும் க்ஷரபுருஷனாகிய ஜீவாத்மாவே ஒழிய அக்ஷரபுருஷன் என்று கருதப்படும் பரமாத்மன் அல்ல.

அக்ஷரபுருஷன் என்பது மகாபுருஷன் என்பதன் ஒரு கதிர் அல்லது பிரதிபிம்பமே ஆகையால், பந்தமோ விடுதலையோ அதற்கில்லை. குறைகள், தேவைகள், பிறப்பு, இறப்பு, பிணி, மூப்பு, சுகம், துக்கம் இவை யாவற்றையும் அனுபவித்து வருவது ஜீவாத்மாவேயாகும். அந்த ஜீவாத்மா எந்த இடத்தில் இவற்றை அநுபவிக்கிறதோ அதே இடத்தில்தான், ஆக இந்த பூலோக வாழ்வில்தான் இக்குறைகள் நீக்கப்பட்டதாக வேண்டும். நம்மை பாதித்து நிற்கும் இக்குறைபாடுகளிலிருந்து நாம் விடுதலையடைய ஒரேவழி பரமாத்மாவினிடம் விளங்கி நிற்கும் சகல ஆன்மீக சக்திகளையும் நமது ஜீவாத்மாவுக்குள் பாய்ந்து பரிமளிக்கும்படி செய்வதுதான். இதற்கான சாதனையையே முயற்சியையே யோக சாதனை என்று அழைக்க முடியும்.

பரமாத்மீகத்தன்மை நமக்குள் புகுந்து மரணத்திற்கும் துக்கத்திற்கும் ஆட்பட்டுள்ள ஸ்தூலவாழ்வை மரணமற்ற அழியாத இன்ப சுக வாழ்வாக மலரச் செய்வது தான் முக்தி அல்லது மோக்ஷமாகும். நமது சிருஷ்டிக்கு காரணமான பரமாத்மாவின் சக்திகளை நாம் பெற்று, அழிவிலிருந்து நீங்கி, அழியாமை பெற்று விளங்க வேண்டுமென்பதற்காகவே இயற்கையானது பல்வேறு கோசங்களை நமக்கு கடனாக அளித்துள்ளது. யோக சாதனைமூலம் வேண்டிய பக்குவத்தை, தேர்ச்சியை நாம் அடைந்ததும், பரமாத்மாவின் சக்திகள் தாமே நமது ஜீவாத்மாவுக்குள் பாய்ந்து அழியாமையையும் பேரின்பத்தையும், கூட்டித்தரும். அத்வைதசித்தி என்பது மகா புருஷனுடைய

சக்தியானது அதன் பிரதிபிம்பமாக ஜீவாத்மாவுக்குள் விளங்கும் அக்ஷர புருஷனிடம் இறங்கிவந்து முழுமையாக பரிமளிக்கச் செய்வதேயாகும். ஜீவாத்மாவிற்கு ஏற்படும் பரிசுத்தம் அல்லது பக்குவத்தை ஒட்டியே இது சாத்தியமாகும். நாம் பக்குவம் அடைந்ததும் பரமாத்மாதன் விருப்பத்திற்கேற்ப நமக்குள் புகுந்து பரிமளிக்க வேண்டுமேயொழிய நாம் அவரிடம் சென்றடைவதென்பது என்றும் இயலாத ஒன்றாகும். ஏனேனில் பரமாத்மா ஒருவரே இங்கும் இருக்கிறார் எங்கும் இருக்கிறார். இயற்கை பரிணாம வளர்ச்சியின் துவக்கத்திலிருந்து இன்றுவரை என்றுமே முன்னேறிச் செல்வதுதான் இயற்கையின் வழிமுறையே ஒழிய பின்னோக்கிச் செல்வதற்கு இங்கு வாய்ப்பே இல்லை. எங்கேயோ அங்கு (மேல்) இருந்து இங்கு (கீழ்) வந்து இயற்கை பரிணாம சக்தி பரிமளிக்கிறது என்பது தான் தொன்றுதொட்டு இருந்துவரும் முன்னேற்ற வழிமுறையாகும்.

அடிப்படையில் எல்லா உயிரும் ஒன்றேயாதலாலும், அது பிரிக்கமுடியாததாக இருப்பதாலும் எந்த ஒரு மனித ஜீவனுக்குள் பரமாத்மீகத்தன்மை புகுந்து பரிமளிக்கத் துவங்கினாலும் எல்லா மனித ஜீவன்களுமே கர்மபந்தத்திலிருந்து விடுதலை பெறும் வாய்ப்பு உள்ளது. எந்த ஒரு யோகமோ தவமோ தனி ஒருவனுடைய முக்தியை குறிக்கோளாக கொண்டிருக்க முடியாது. மோக்ஷம் என்பது தனிஒருவனுக்கே உரித்தானதாகவும் இருப்பதற்கில்லை. யோக சாதகத்தில் சுயநலத்திற்கும் இடமில்லை. எல்லா உயிரையும் தன்னுள்ளும், தன்னையே எல்லா உயிரினுள்ளும் காணமுடியாதவனுக்கு எந்த யோக சித்தியும் சாத்தியமில்லை. ஆகவே சிருஷ்டியின் ஆரம்பம் முதற்கொண்டு இன்றுவரைக்கும் யாருமே உண்மையான மோக்ஷம் அடையவில்லை என்று உறுதியாகக் கொள்ளலாம். இயற்கை பரிணாம வளர்ச்சியின் முன்னேற்றத்திற்கு மதிப்பு கொடுக்காமல் இவ்வுலக வாழ்வே வீண், ஆகவே மறுபிறவியே வேண்டாமென்று வெறுப்புற்ற சிலர் மீண்டும் பிறக்காமல் அந்தரத்திலேயே நிலைபெற்றிருக்கக் கூடுமே ஒழிய அவர்கள் மோக்ஷம் அடைந்துவிட்டார்கள் என்று கொள்வதற்கில்லை.

யாரொருவன் எல்லா ஜீவன்களிடத்தும் ஏகப்பிரம்மமே குடிகொண்டிருக்கிறது என்கிற ஆன்மீக ஒருமைப்பாட்டை உணர்ந்து எல்லா ஜீவன்களிடத்தும் முழுமையான அன்போடும் நட்போடும் கருணையோடும் நடந்து கொள்கிறானோ, எவனொருவனிடத்து இந்த ஒருமைப்பாட்டுணர்வால் அகங்காரம் என்ற (தான் தனது என்ற) உணர்வு அடியோடு நாசமடைந்துவிட்டதோ, எவனொருவனுக்கு விரோதிகள் என்று யாரும் இல்லையோ, அவனுள் தான் பரமாத்மாவின் சக்தி பாய்ந்து பரிமளிக்க இயலும். அத்தகைய ஒருவனே பரமாத்மாவின் பிரதிபிம்பமான தனது அந்தராத்மாவில் எப்போதும் குடியிருப்பவனாவான்.

நமது மானசீக, சூக்ஷ்ம, ஸ்தூல கோசங்கள் மூன்றுமே பிரக்ருதி அம்சமானதால் தன்னுணர்வு - சுயபிரக்ஞை இல்லாதவையே.

தன்னுணர்வு பெற்ற பிறகுதான் இவை முழு அறிவோடும், நீங்காத மாறுதலடையாத விழிப்புணர்வோடும் இயங்கமுடியும். அப்போதுதான் வெளியில் தனக்குப் புறம்பில் ஏதும் தேடிப் பெறவேண்டிய அவசியமும் அற்றுப்போகும். தன்னுணர்வு பெற்றபிறகுதான் அவனுக்குள் சுயம்பிரகாசம் ஏற்படும். எல்லா ஞானங்களுமே அவனுக்கு அப்போதுதான் விளங்கும். அதன்பிறகு அவனுக்கு தெரியாததென்பதே ஏதும் இருக்காது. எப்போதும் அயரா விழிப்புடன் விளங்குவான். அப்போதுதான் அவன் பரமாத்மாவுடன் ஒன்றிணைந்தவனாகிறான். பரமாத்மாவின் ஒளி அவனிடம் முழுமையாக சுடர்விட்டு பிரகாசிக்கும். அவனுக்கிருந்துவந்த வரம்புகள் யாவும் நீங்கி சர்வ வல்லமை பெற்றவனாவான். பிரக்ருதி அம்சமான மேலே கூறப்பட்ட மானசீக, சூக்ஷ்ம, ஸ்தூல சரீரங்கள் மூன்றுமே உணர்வுபூர்வமாய் உணர்வுகளுக்கு அப்பாற்பட்டவனாகி விடுவான். அவனது ஸ்தூலமே சர்வ பிரக்ஞையும் பெற்று தன்மயமாகிவிடுகிறது. அவன் பிரக்ருதியின் எல்லையைக் கடந்து முக்தனாகிவிடுகிறான். சுதந்திர புருஷனாகிறான். கர்மபந்தத்திலிருந்து விடுதலை பெறுவதென்பதன் பொருள் இதுதான். கனிந்த ஒரு பழமானது அதை விரும்பி நிற்கும் கிளியை எப்படி தன்பால் ஈர்க்குமோ அதுபோல் இதய தூய்மையினால்

ஆன்மீக ஒருமைப்பாட்டு உணர்வினாலும் பக்குவம் பெற்ற ஒருவனும் பரமாத்மாவின் ஒளிக்கதிரை தன்னகத்திற்கு ஈர்த்துக்கொள்வான். அப்போதுதான் அவன் பரிணாம வளர்ச்சியின் முடிவெல்லையான அழியாத் தன்மையை சாஸ்வத்தை அடைந்துவிட்டதாக கூறமுடியும். மற்ற யாருக்கும் உபயோகமில்லாது பல்லாண்டு காலமோ ஏன் சாஸ்வதமாகவேகூட ஒரு செயலற்ற பாரங்கல்லைபோல் வாழ்ந்திருப்பதால் ஒருவனுக்கு யாது பயன்? பிரம்மத்துக்குச் சமமாக தேவையற்றும் சுதந்திரமாகவும் சாஸ்வதமாகவும் வாழவேண்டும் என்பதுதான் நமது குறிக்கோளாக இருக்கவேண்டும். பிரளய காலத்திலும் யோகி சாவதில்லை என்று சித்தர்களால் கூறப்பட்ட சாஸ்வதம் இதுதான். தேகம் அழிந்த பிறகு ஞானமும் இல்லை. யோகமும் இல்லை. அழியாத சரீரம் ஒன்று இருக்கிறது. அதை அடையும் மார்க்கத்தை எனக்குக் காட்டிக் கொடுப்பாயாக. அப்போதுதான் முழுமைப் பேறுபெற்று. பூர்ணமடைந்து தேவையற்று நான் இருக்கமுடியும் என்று சித்தர்கள் வேண்டி நின்றது இந்த சாகா நிலையைத்தான். தேவை ஏதும் அற்ற நிலையே பூர்ணம் அல்லது முழுமை பெற்ற நிலையாகும்.

எண்ணற்ற தேவைகள் இப்போது நம்மை ஆட்கொண்டுள்ளன. இத்தேவைகளின் ஆக்கிரமிப்பிலிருந்து நம்மை நம்மால் விடுவித்துக்கொள்ள முடியவில்லை. இந்த குறைபாடே பல சமுதாய இன்னல்களுக்கும் ஏன் மகா யுத்தங்களுக்குக்கூட காரணமாயிருந்து வருகிறது. மக்களிடையே குடிகொண்டிருக்கும் தான் தனது என்ற சுயநலப்பற்றிற்குக்கூட தம் தேவைகளை சரிவர நிவர்த்தி செய்துக்கொள்ள முடியாத குறைபாடே காரணமாயமைந்து நிற்கிறது. இந்த நிறைவு செய்து கொள்ளமுடியாத குறைபாட்டினாலேயே இந்த உலக வாழ்க்கை துன்பமயமானது, துக்ககரமானது என்று கருதி அறிஞர்கள் சிலர் இந்த வாழ்வை வெறுத்து துறவு வாழ்க்கையை மேற்கொள்கின்றனர். துன்பமும் துக்கமும் நிறைந்த இவ்வுலக வாழ்விலிருந்து நிகழ்காலத்திலும் எதிர்காலத்திலும் விடுதலை பெறலாம் என்ற நம்பிக்கையினாலேயே சந்நியாசத்தை அவர்கள் மேற்கொள்கின்றனர். இந்த உலகில் ஒருவரை ஒருவர் அண்டித்தான் வாழவேண்டியிருக்கிறதே ஒழிய ஒருவராலும் சுதந்திரமாக வாழமுடிவதில்லை. நாம் இவ்வுலகில் தொடர்ந்து வாழ

நீர், நெருப்பு, காற்று, வெளிச்சம், உணவு இவை யாவும் தேவையாகத்தான் இருக்கிறது. நமக்கு வெளிப்புறத்திலிருந்து எந்த உதவியும் பெறாமல் வாழ்வதே சுதந்திர வாழ்வாகும்.

நமது தேவைகளை நிறைவு செய்துகொள்ள வெளி உதவியை எதிர்பார்க்கும் இன்றைய இழிநிலை மாறவேண்டும். பரமாத்மாவுக்கு, பிரம்மத்துக்கு, கடவுளுக்கு ஒப்பாக வாழ்வது என்பது சுயதேவை ஏதும் இல்லாத தனக்கென வாழாது பிறர்க்கென வாழும் சுதந்திர வாழ்வாகும். இதற்காக தன் வாழ்க்கையை, தன்னை அழித்துக் கொள்வது தன் சுதந்திரத்தை இழப்பது ஒருபோதும் முக்தியாகாது. உலகெலாம் ஒன்றெனப் பேணி உலகப் பொது நலத்திற்கென தன்னை அர்ப்பணித்து வாழும் தனிமனித சுதந்திர வாழ்வே பிரபஞ்ச பரிணாம வளர்ச்சியின் எல்லையாகும். இதற்காகவே உலகமும் மனிதனும் படைக்கப்பட்டுள்ளன. தன்னழிவிற்கு தன்னைத்தானே அழித்துக்கொள்வதற்கு இந்த பிரபஞ்ச பரிணாம வளர்ச்சியில் இடமே இல்லை.

பிரம்மத்தை உணர்ந்துகொண்ட ஒருவன் தான் பிரம்மமாகவே ஆகிவிடுகிறான் என்ற மாஸ்டர் கருத்துப்படி அவன் தனது படைப்பிற்கான காரணத்தையும், தன் வாழ்வின் எதிர்கால நடைமுறையையும் பிரபஞ்சத்தையும் பிரபஞ்சத்தினுடைய பரிணாம வளர்ச்சியின் முடிவான பயன்களையும் அவன் அறிந்தவனாவான். அவன் மரணம் அற்றவனாக, சாஸ்வதத்தன்மை பெற்றவனாக, யோகியாக, முக்தனாக விளங்குவான். அவனிடம் அழிவுக்கு உட்பட்டிருந்த பகுதியாகவே (க்ஷர புருஷனாகிய) மானசீக சூக்ஷம ஸ்தூல கோசங்கள் அழியாத்தன்மை பெறுகிறதே ஒழிய, என்றுமே அழிவிற்கு உட்பட்டிராத (அக்ஷர புருஷனாகிய) பரமாத்மீகத்தன்மை புதிதாக சாஸ்வதம் அடைவதில்லை.

நம்மிடம் இதுவரை பரிணமிக்காமல் உள்ளடக்கம் பெற்றிருந்த அழியாத்தன்மையுள்ள அக்ஷரபுருஷ தத்துவத்தை இனிதான் நாம் இயக்கத்திற்கு கொண்டுவரவேண்டும். இந்த இயக்கத்தை கொண்டு வரவேண்டியது யார்? யாரால் இதை

இயக்கத்திற்கு கொண்டுவரமுடியும்? ஒருவன் சுயமாக பக்குவம் பெற்ற நிலையில்தான் பரமாத்மாவாகிய பரமபுருஷன்தான், தன் பிரதிபிம்பமாக அவனிடம் உள்ளடக்கம் பெற்றிருக்கும் அக்ஷரபுருஷ தத்துவத்தை செயல்பாட்டிற்கு கொண்டுவர முடியும். இந்த சுபகாரியத்தை செய்யவே பரப்பிரம்ம சொரூபமாகிய மாஸ்டர் சி.வி.வி. அவர்கள் பூலோகத்திற்கு வந்து இந்த புத்துணர்ச்சியை தனது யோக தீக்ஷை மூலம் எல்லோருக்கம் கொடுத்து வருகிறார்.

தனது தீக்ஷை மூலம் தனது சிடனின் குண்டலினிக்கு உத்திரவு கொடுத்து பரமாத்மா சக்தி ஒளி அவனுள் பிரவேசிக்கும் பக்குவத்தை உண்டாக்கித் தரும்படி செய்கிறார். மாஸ்டர் சி.வி.வி அவர்களே எல்லா குண்டலினிகளுக்கும் நாதனாவார். பிரபஞ்சத்திற்கும் பிரபஞ்சத்திலுள்ள எல்லா குண்டலினிகளுக்கும் ஒரு தூண்டுதல் கொடுத்து அதன்மூலம் நூதன பிரபஞ்சத்தையும் நூதன சமுதாயத்தையும் அவர் தோற்று விக்கப்போகிறார். அது கர்மமோ மாயையோ பாதிக்கமுடியாத தெய்வீக மனித சமுதாயத்தைக் கொண்ட சத்யலோகமாக விளங்கும். தேவை மரணம், யுத்தம் இவைகளின் பாதிப்பில்லாத ஒரு புதுகல்பம் விரைவில் தோன்றும். மாறிக்கொண்டேயிருக்கும் நிலையில்லாத நிலையிலிருந்து மாறாத நித்தியமான உண்மை நிலைக்கு அழைத்துச் செல். பொய்மையிலிருந்து மெய்மைக்கு அழைத்துச் செல் . அறியாமை இருளிலிருந்து என்னை மெய்ஞ்ஞான ஒளிக்கு அழைத்துச் செல். அழிவிலிருந்து அழியாமைக்க அழைத்துச் செல் என்ற மாஸ்டர் அவர்களின் வேண்டுதலும் இதுதான்.

இந்த உயர்நிலைக்கு நம்மை எல்லாம் அழைத்துச் செல்ல பிரம்மமே தான் நமது மகாகுரு மாஸ்டர் சி.வி.வி ஆக வந்துள்ளது. இந்த பிரபஞ்சத்தையும் ஆத்மாக்களையும் தன் நாத சக்தியின்மூலம் சிருஷ்டிக்கு கொண்டுவந்த நாதப்பிரம்மம் மாஸ்டர் சி.வி.வி அவர்களேயாவார். எல்லா யோகத்திலும் சிறந்தது நாதத்தை அடிப்படையாகக் கொண்ட யோகமேயாகும். நம் யோகமும் நாதத்தையே முக்கிய அங்கமாகக் கொண்டு பயிற்சிக்கப்பட்டு வருகிறது. ஆக எல்லோரும் நாதப்பிரம்மமாகிய பரப்பிரம்ம மாஸ்டர் சி.வி.வி -யின் ஆசிபெற்று மகிழ்வோமாக.

# ஜீவாத்மா நிலை :

சிந்தையையடக்கி சிதம்பரத்தைப்பார் என்று கேட்டிருப்பீர்கள். சித் அம்பரம் என்பது பிரம்ம ரகசியம். அதை (Deluding Level) டெல்யூடிங் லெவல் என்று மாஸ்டர் தெரிவித்துள்ளார். அதுவரை நமக்கு சர்வபிரக்ஞை (All sides Conscience) -ஆல் சைடு கான்ஷியன்ஸ் அளிப்பது மாஸ்டர் நமக்குக் கொடுத்திருக்கும் ஆறுவாக்குறுதிகளில் ஒன்று இந்த ரகசியத்தை தன் குருநாதன் காட்டிய பாதையில் சென்று அறிந்த பிறகு மாஸ்டர் **என்.ஆர்.பி.வி** அதை ஒட்டி போதித்து வந்துள்ளார். நாம் எல்லோரும் அதை அறியலாம். **பிரவேசாத்மா, அந்தராத்மா, பரமாத்மா, ஜீவாத்மா** என்றால் என்ன? இந்த நான்கும் ஒரே ஆத்மாவாகப் பாவிக்கலாம். ஒவ்வொரு ஸ்டேஜிக்கும் நிலைமை, இடம் அல்லது பருவத்துக்கும்) நிர்ணயித்த வரிசை கிரமம், தன்னைப்போல் ஒன்றை சிருஷ்டிக்க வேண்டுமென்ற சுயஇச்சை லவ் கிரியேட் (Love Create) ஆய் பரிமளிக்கும் காலக்கூர்வரையில் கொடுத்த பெயர் பிரவேசாத்மா, ஆக்ஷன் (Action) இல்லாத இடத்தில் நில் கிரேடில் ( Nil Grade) லவ் (Love) ஆக்ட் (Act) செய்தது. ஜன்மா எடுக்கவேண்டுமென்ற தோற்றம் ஏற்பட்டது. அதுவரை அதன் பெயர் பிரவேசாத்மாதான். இதை பீலிங் என்றும் அதன் ஆக்ஷனை சிம்பல் லைட் (Symbol Light) வெளிச்சமோர் குறிப்பு என்று சொல்லவேண்டும். மேற்கண்ட லவ்வால் ஆசாபாசத்தால் தன்னிடத்திலிருந்து மாக்னெட் (Magnet) காந்தம் மூலமாய் தன் கேஷியஸ் உருவத்தில் (Gaseous Figure) மனிதனைச் சுற்றி நிற்கும் மெமொராண்டம் என்ற அண்டவட்டத்தின் உச்சிஸ்தானமாகிய சூரிய மண்டலத்திற்கு சற்று மேலே உள்ள தூம மண்டலம் ஒரு லைபை (Life) இழுத்து டிரா (Draw) செய்து ஒரு (Atom) ஆட்டெம் ஸ்டேஜாய் அது அந்த ஆவி உருவத்திலிருந்து விடுபட்டு ஸ்டெபிலிடி (Stability- Stay, be, Lead) தூலகோசத்தை அடைந்து அங்கேயேதங்கி அதை நடத்து) என்ற பெயர் பெற்று, தகப்பன் தலையின் (Head) உச்சி பாகத்தில் (Top Side) வந்துநின்று ஒரு வித்து (Seed) உண்டாக்க (Create) முயற்சி (Attempt) செய்தவரையில் கொடுத்த பெயர் அந்தராத்மா. இதை ஹீலிங்க் (He-Link) என்றும் அதன் மார்க்கத்தை மோன்கிரூட் (Mongee Route, Mankey Route) என்றும் சொல்லலாம்.

பிரவேசாத்மா ஸ்டேஜ் முதல் அந்தராத்மா ஸ்டேஜ் வரை உள்ள மார்க்த்தில் ஓர் வெளிச்சக்குறிப்பு ஓடுவதை லைட் ஆன் தி பாத் ( Light on the path) என்று சொல்லலாம். இந்த ஒளி ஓட்டத்தை ஹாலிங் (Hauling) என்று சொல்லவேண்டும். ஹாலிங் (Hauling) என்ற ஆங்கில சொல்லுக்கு இழுத்துச் செல்லுதல் என்ற பெயரும் உண்டு. பிறவியெடுக்க வேண்டியதற்காக அதற்குத்தக்கபடி ஒரு வித்து உண்டாக்கின ஸ்டேஜூம் அந்த வித்தை டிபாசிட் (Deposit) செய்ய ஏற்படும் முயற்சி (Attempt)யும் டிபாசிட் ஆனநிலையும் ஒரு பாடி (Body) கிரியேட் பண்ணும் அந்த சரீரத்தை வெளிப்படுத்தும் வரை பரமாத்மாவின் வேலை. அந்த ராத்மா நிலைக்கும் வித்து உண்டான நிலைக்கும் இடையே உள்ள மார்க்கத்தின் பெயர் மோாங்கிளுட். பிண்டத்துக்குள் இதை வீணாதண்டு, வெர்டீபிரல் காலம் (Vertebral Column) என்று சொல்லலாம். வித்து உண்டான இடத்துக்கும் அது டிபாசிட் ஆன இடத்துக்கும் இடையே உள்ள மார்க்கத்தை காமெட்டயர் ( Comet Tyre) என்று சொல்லலாம். வித்து அமர்ந்த இடத்தில் அதை குண்டலிணி என்றும் காமெட் (comet) என்றும் சொல்லலாம். இந்த குண்டலினி ஸ்டேஜிலிருந்து கம்-எட் (come-yet) மேன் வளர்ச்சி (Further progress) இனியுள்ள விருத்தி, எதிர்பார்க்கும் காலம் உண்டு. அந்தக்காலம் உலகத்திற்கே !.

ஓர் காமெட் வரும் என்று சொல்வது போல் Comet என்ற சப்தம் அமைந்துள்ளது.பரமாத்மா ஸ்டேஜிலுள்ள ஆக்ஷனை ஹோலிங் (Whole Link: Whole) என்ற ஆங்கில பதத்திற்கு முழுவதும் என்ற பொருள் உண்டு என்று சொல்லலாம். சரீரம் வெளிப்படவும் ஸ்டெபிலிடி அதனுட்புகுந்து பூமியில் பர்தர் எக்ஸ்பீரியன்ஸ் (Further Experience) (இனி உள்ள அனுபவம்) அல்லது அனுபவம் தெரிந்து கொள்ள தன் ஆக்ஷனாகிய உச்வாச நிச்வாசத்தை (Breathe-in Breathe-out) எடுத்துக்கொண்ட இடத்தில் அந்த உயிருக்கு ஏற்பட்ட பெயர் ஜீவாத்மா. இந்த ஜீவனே சரீரத்தை உண்டு செய்து அதில் பிரவேசிக்கவேண்டுமென்ற தோற்றம் முதலில் எடுத்தது. அதனால் பிரவேச ஜீவாத்மா ஆயிற்று. அந்த ஜீவன் ஸ்டெபிலிடியாய் தகப்பன் தலைமேல் நின்ற இடத்தில் அந்தர ஜீவாத்மா ஆயிற்று. அந்த ஜீவன் சரியான வித்து செய்து டெபாசிட் செய்து சரீரம் உற்பத்தி செய்து அதை வெளிப்படுத்தியதால் பரம ஜீவாத்மாவாயிற்று.

பரமஜீவாத்மாவும் ஜீவாத்மாவும் சேர்ந்ததுதான் இந்த தூல சரீரம் Physical Body - பிசிகல் பாடி. ஜீவாத்மா ஆக்ஷனை ஹௌலிங்க் (How - Link) என்று சொல்லலாம். இந்த ஜீவாத்மாவைத்தான் உயிருள்ள சரீரம் என்கிறோம். பரம ஜீவாத்மாவாக இருந்ததோடு, அப்பரம்பொருள் நின்றும் தனித்த ஜீவாத்மா நிலை ஏற்பட்டு விட்டாதே, எப்படி மறுபடியும் அந்த பரம்பொருளின் தத்துவத்தை தனித்த ஜீவனாகிய என்னுடன் லயிக்கச்செய்வது (How - Link) ஹௌலிங்க் என்ற கேள்வி ஜீவாத்மா நிலையில் ஏற்படுகிறது. இக்கேள்வியின் பதில்தான் நமது யோகம். தூலசரீரத்தில் **முதன்முதல் இக்கேள்வியைப் போட்டது மாஸ்டரின் ஜீவாத்மாவே.**

## ப்ரோக்ராம் ஆப் செவன் அட்ஜஸ்மென்ட்ஸ்
## Programme of Seven Adjustments

1. மாஸ்டர்ஸ் அட் ஜஸ்ட்மெண்ட். (Master Adjustment)
2. மிமோரியா நியு மாடல் பிட்யூடரி ரெகுலேஷன் அட்ஜஸ்ட்மென்ட். Memoria New Model Pituitary Regulation Adjustment.
3. க்ரானிக் டிஸீஸஸ் ரெக்டிபிகேஷன் அட்ஜஸ்ட்மென்ட். Chronic Diseases Rectification Adjustment.
4. விகர் சப்ளை அட்ஜஸ்ட்மென்ட். Vigour Supply Adjustment.
5. ஆஸ்ட்ரல் சபரேஷன் அட்ஜஸ்ட்மென்ட். Astral Separation Adjustment.
6. ப்ரீதிங் போரிங் கெமிகல் சேன்ஜ் அட்ஜஸ்ட்மென்ட். Breathing Boring Chemical Change Adjustment.
7. மிமோரியா சைட் அட்ஜஸ்ட்மென்ட். Memoria Sight Adjustment.

## மாஸ்டர் அளித்துள்ள சிகிச்சை பற்றிய உபதேசங்கள்

20-11-1915 அன்று சி.வி.வி அவர்களால் அருளப்பட்டது.

1. விஷக்கடிக்கு மட்டும் சாதகர்கள் எல்லோருக்குமே சிகிச்சை அளிக்கலாம்.

2. சிகிச்சைக்காக ஏதும் உதவித் தொகை கண்டிப்பாக பெறக்கூடாது.

3. நோயாளியைப் பற்றி தனக்கு சிகிச்சையின் போது தெரியவந்த ஆத்மார்த்த இரகசியங்களை நோயாளிக்கோ அவரது உறவினருக்கோ தெரிவிக்கக்கூடாது.

## சிகிச்சைக்கான கால வரம்பு

1. கட்டி – கட்டி உடைய 15 நாளும், முழுவதும் ஆற மேலும் 15 நாளும் போதுமானது.
2. புற்றுநோய் (Cancer)– நாளொன்றுக்கு 2 முறை வீதம் 10 நாள் போதும்.
3. இராஜபிளவை – 15 நாள். நாளொன்றுக்கு 2 முறை.
4. கன்னோரியா – நோயின் கடுமைக்கு ஏற்ப நாட்கள் கூடலாம்.
5. சுரம் (Fever) – ஒரே தடவையில் பாதி குறையும். மேலும் ஒன்றிரண்டு முறை தேவைப்படும்.
6. விரைவாதம் – 16 நாள் சிகிச்சை தேவைப்படும்.

10 வருட கால அப்பியாசத்தில் உயிர் சக்தியானது மூளையில் புகுந்து நன்கு வேலை செய்ய ஆரம்பித்ததை உணர்ந்த பின்பு - ஆரா - மூலம் சக்தியை பரவச்செய்து தானிருக்கும் இடத்திலிருந்து ஆரா மூலம் பிறருக்கு சிகிச்சை அளித்து உதவ முடியும்.

# FIVE LINKS:

மாஸ்டர் இனிஸியேஷன் முறையால் நமக்கும் பிரம்மம் என்று சொல்லப்படும் Origin–க்கும் ஓர் சங்கிலிப் பிணைப்பை உண்டாக்கி வைக்கிறார்.

(A) HALING ( Ha-link) : LOVE (ஆசை)
(B) HEALING ( He-link) : LIFE (உயிர்)
(C) HOLING (Ho-link) : TRUTH (மெய்)
(D) HOWLING (How-link) : GOD (பரமன்)
(E) FEELING ( Fee-link) : மேற்படி நான்கின் ஞான பாகங்களைத் தெரிந்துக்கொள்ள மனதில் கவலை ஏற்பட்டு தெரிந்துகொள்ள Attempt செய்தது Feeling.

தற்சமயம் cosmos–ல் (சிருஷ்டி அமைப்பு) ஹாலிங், ஹௌலிங் இவ்விரண்டும்தான் வேலை செய்திருக்கின்றன. ஹீலிங், ஹோலிங் இவை இனிமேல் தான் மனிதனுக்குப் பயன்பட வேண்டும்.

(A) HALING & HOWLING : HEMRO (சிவம்)
(B) HEALING & HOLING : HERCURRY (சக்தி)

மாஸ்டர் நமது யோகப்பூர்த்தியால் ஆறுவித அற்புத சக்திகளை நமக்கு கொடுப்பதாக வாக்களித்துள்ளார்.

1. Plenty of PRANA : (அளவு கடந்த பிராணன்)
2. Conscious stage in this Life :
(இந்த ஜன்மத்தில் பிரக்ஞா பங்கமற்ற / நினைவு இழப்பற்ற நிலை)
3. The Present Body without decay :
(இந்த உடல் குன்றாது நிற்றல் / நோய் இல்லாத)
4. Without figure change : (மாறாத உருவம்)
5. Recalling the DEAD : (செத்தோரை எழுப்புதல்)
(a) உயிர் பிரிந்து உடல் மட்டும் இருக்கும்போது
(b) சாகும் தருவாயில்
(c) உயிர் பிரிந்து உடல் அழிந்த பிறகு
6. All sides conscience reaching the Deluding one. தன்னைக் காட்டாது மறைந்து நிற்கும் ஏகத்தை அறியும் அளவில் சர்வப்பிரக்ஞை / ஏக உணர்வு)

## Sight :

(a) VERSIA : முன்னுள்ள பொருட்கள் தெரியும்.

(b) EGO STONE : பொருட்களின் உட்பாகம் தெரியும்.

(c) PILONIA : விலங்கினங்களின் உட்பாகம் தெரியும்.

(d) VISIPTRA : தாவர வளர்ச்சி தெரியும்.

(e) HINTING BORE : தூர திருஷ்டி தெரியும்.

(f) HILIWARZ : மறைபொருள் தெரியும்.

(g) MEMORIA : சர்வ உயர்ஞானம் தெரியும்.

யோகப்பூர்த்திக்குப் பின் இந்த ஞான திருஷ்டிகள் மீடியம்களுக்கு வேலை செய்யும்.

**Memory Flash:** (சர்வ பிரக்ஞையின் மின்னல் ஒளி)

நமது பிரக்ஞை வினாடிக்கு வினாடி நடக்கும் சம்பவங்களைத்தான் அறிய முடிகிறது. (அதாவது வினாடிக்கு வினாடி தாவுகிறது) ஓர் வினாடிக்கும் மற்றோர் வினாடிக்கும் இடையே நடக்கும் சம்பவங்களையோ வினாடிக்குள் நடக்கும் சம்பவங்களையோ துடர்பாக உணரமுடியவில்லை. மூன்று வித மதி மயக்கங்களும் வேலை செய்யாத நிலை ஒன்றை நம் யோக சாதகத்தினால் சிந்திக்க முடியும். இது Memory Flash என்பதாகும்.

## Merry Life : ஆனந்த உயிர் - உற்பத்தியாகும் இடமும் வேலைசெய்யும் வழியும்

1. **Highest or Very pure** : மஹா சுத்தம் என்ற ஒன்று.

2. **Greatest** : மஹா சுத்தத்தின் அடிப்பாகம். புதுமுறை சிருஷ்டிமுறை ஞானம் - (Hembro Knowledge, Long - Greate Lifery Sceience ஞானம் – இதை New Model Pituitary Work – ன் மூலகாரணமான -Second Origin எனலாம்.

3. **Pussifigrity** : மஹா சுத்தத்தின் சக்திபீடம் என்ற Other அல்லது இரண்டாகக் கருதலாம். கிரேடெஸ்ட் என்பதிலிருந்து ஏற்படும் நீடுழி வாழக் கூடிய உயிரின் சாரம் பசிபிக்கிரிடி என்ற சக்தி பீடம் (Good Dome or Activity Ground) வாயிலாக உண்டாகிறது.

**4. High Lobes One :** High Low என்றால் மேல்–கீழ் என்பதாகும். தற்கால சிருஷ்டி முறையின் ஆதி அந்தம் எவ்வளவு தூரம் போகிறதென்று ஆராயுமிடத்தில் கிடைக்கும் எல்லை இது. இதையே First Origin என்று கருதவேண்டும்.

**5. Ocean of Prana :** இது ஹை லோப்ஸ் ஒன்னின் அடிஸ்தானம். பிராணன், அணு அணுவாகப் பிரியாமல் அசைவற்ற சமுத்திரம்போல் உள்ள பரப்பு.

**6. Micro Level :** ஹை லோப்ஸ் ஒன் என்பதிலிருந்து வரும் சாரம் பல மாறுதல்கள் அடைந்து பல சக்தி இயக்கங்களுக்குள்ளடங்கி பிராணா என்ற நிலையை அடையுமிடம். இதன் பிறகே திருமூர்த்தி என்ற மாயப் போர்வை தரித்து அணு அணுவாய்ப் பிரிகிற பிராணாவஸ்தை ஏற்படுகிறது.

**Triple Trick :** இச்சிருஷ்டியின் சக்திபீடம், சமுத்திரம்போல் பரவி நிற்கும் பிராணன் அணு அணுவாய்ப் பிரியும் இடம். இங்கு அணு துண்டித்துத் தெறித்து, சிருஷ்டி நடத்தவே, சிருஷ்டிக்கப் பட்டவையாவும் தன் பூரண நிலையை அடைய முடியாமல் மூடப்பிரகிருதிகளாய் ஆகிவிட்டன.

**7. Planetary Field: (கோள்கள் சஞ்சரிக்கும் பிரதேசம்)**
இதற்கும் திருமூர்த்தி கட்டடத்திற்கும் இடையே Ether என்ற லிங்க பரப்பு நிரம்பியுள்ளது. பிராணாவின் அசைவால் ஏற்படும் Pressure அல்லது தடிப்பே ஈதர் என்று மாஸ்டர் கூறியுள்ளார். (Ether is motion of Truth) இப்பிரதேசமே Cosmic Memorandum என்பது.

**8. Earth (பூமி)**
முதல் ஆரிஜின், இரண்டாம் ஆரிஜின் கொடுக்கும் சக்திகளை பூமிக்கும், மனித ரூபத்துக்கும் சேரும்படி கோள்கள் செய்வதை Leading என்று மாஸ்டர் குறித்துள்ளார்.

இப்படிப்பட்ட பல அரிய உயர் ஞானங்களை மாஸ்டர் மீடியம்களுக்கு கொடுத்தார்.

# ஞானம் அடையுங்கள்

- இதுவே தேர்ச்சியடைய சிறந்த முறை என்று மாஸ்டர் கூறியுள்ளார். திடம் பெறாத யோசனைகள் அதாவது கருத்தில்லாத, எண்ணமில்லாத யோசனைகள் மறு பிறவிக்கே கொண்டு செல்லும். காலா காலத்தில் காரியங்களைச் செய்யத் தவறினால் அதனால் கஷ்டங்களே நேரிடும். கவலைகள்தான் அதிகமாகும். மனந்தளாது தளர்ச்சியுறும். அத்தளர்ச்சியானது பலவீனம் அடையவே எல்லாம் விதிப்படி நடக்கும் என்ற மனப்பான்மை ஏற்பாட்டு விதிக்குச் சரண் அடைய பணிய நேரிடும். ஆனால் மாஸ்டர் காட்டிய வழியோ விதியை நமக்குப் பணியும்படி செய்வதாகும். வலிவு மனம், திடமனம், எக்கு மனம் படைத்தவர்கள் எப்போதும் விதிக்குப் பணிய மாட்டார்கள். காலா காலத்தில் காரியத்தைச் செய்து முடிப்பார்கள். ஆகவே நம் காரியங்களை எப்போதும் யோசித்தே செய்ய வேண்டும். மாஸ்டரைக் கன்சல்ட் செய்தே செய்யவேண்டும். மாஸ்டரைக் கன்சல்ட செய்யும்மிடம் மூளையில் மேல் பாகத்திலுள்ள மஹாபர நிர்வாணிக் பாகம் என்று ம-பரமாணு கோர்ஸில் தெரிவிக்கப்பட்டிருப்பதால் யோஜிக்கும் காலங்களில் நம் கவனம் அத்திடத்திலேயேஇருக்க வேண்டும். வேறு பாகங்களில் கவனம் செலுத்துவது நேர்த்தியல்ல. ஆகவே பர நிர்வாணக் பாகத்திலுள்ள ஆக்ஞா சென்டரிலும் மஹாபர நிர்வாணிக் பாகத்திலுள்ள உச்சிப்பள்ளம், இன்னர் லோடஸ் பாகங்களிலும் கவனம் இருக்க வேண்டும். இதுவேதான் ஐந்தாம் வேதப் பயிற்சியாகும்.

நமக்குள் ஓடும் சக்தியோட்டத்தை, போர்ஸைக் கவனியுங்கள் என்று மாஸ்டர் சொல்லியுள்ளார். அச்சக்தியே உயிர் ஓட்டம் அல்லது லைப் ஆக்டிவிடி ஆகும். அதன் ஓட்டத்தை நாம் நம் மனதால் கவனிக்க வேண்டும். அப்போதுதான் நம் மனதால் நம் ஆத்மாவை உணர முடியும். மாஸ்டர் உயிரும் நம் உயிருடனேயே கலந்து வேலை செய்வதால் நம் மனமானது அதைப் பின் பற்றிச் செல்ல மாஸ்டர் ஆத்மாவையும் நாம் உணரவும் தரிசிக்கவும் வழி ஏற்படும். இதுவே கவனித்தால் அல்லது ஆப்சர்வேஷன் மைண்ட் பாலோயிங் தி லைப் ஆக்டிவிடி ஈஸ் ரியலைஸிங் தி லைப் விதின் - அதாவது பல இடங்களிலும்

ஓடி வேலை செய்யும் ஆத்மாவை மனதால் பின் பற்றிச் சென்று அது ஒடுங்கும் இடத்தை அறிந்து அத்திட்டத்திலிருந்து எல்லாப் பாகங்களையும் அறிதலே தன்னைத் தான் அறிதலும் தானேஎல்லாமாய் இருக்கக் காணலும் ஆகும். அந்த நிலையில்தான் உலகில் எது நடந்தாலும் அது நம் உடலில் பிரதிபலிப்பதை உணர்ந்து அதை நீக்கவும் ஓர் ஆதங்கம் ஏற்படும். இதுவே பிரம்மத்தைக் கண்டு மோக்ஷம் அடைதலும் ஆகும். பிரம்மத்தை அறிந்த நிலையில் நம்மைச் சூழ்ந்து துக்கமும், சாவும் இருந்து வருமானால் அது பிரம்மானந்தாய் இருக்காது. பிரம்ம அவஸ்தையாகத்தான் இருக்க முடியும். ஆக எல்லா உயிரும் ஒன்றாயுள்ள அந்த நிலையில் நாம் ஓர் பாதுகாப்பு ஏற்படுத்துவோமானால், அதனால் எல்லா உயிருமே பாதுகாக்கப்பட்டு அதனால் ஆனந்தமாயிருந்தாலும் கை கூடும். பிற உயிர்மாள, தான் உயிர் மட்டில் நிலை பெற்றிருக்கிறதென்றால் பிறந்தோர் உயிர் பிரியும்போது நிலைபெற்றுள்ளதான தன் உயிரும் துடி துடிக்கத்தான் செய்யும். ஆகவே நம்யோகம் ஒரு அப்பியாசமாக மட்டுமில்லாமல் முடிவான மோக்ஷ நிலையாகவும் இருக்கிறது. யோகாப்பியாசம் செய்வதால் தன்னையறிந்த மோக்ஷ நிலை எய்த சில காரியங்களைச் செய்கிறோம்.



# பிருக்த ரஹித தாரக இராஜயோகம்

சிருஷ்டிப்பிரம்மம் என்பதும் பிராண அலையின் கர்த்தா என்பதும் சகல புவனங்களுக்கும் உற்பத்தி கர்த்தாவான பரப்பிரம்மத்தையே குறிக்கும். இந்த பரப்பிரம்மம் துன்பம் நீங்கிய சாஸ்வத தன்மை பொருந்திய ஒரு நூதன பரிணாம வளர்ச்சி திட்டத்தை, இன்றைய நாலாம் கட்ட பரிணாம வளர்ச்சியில் புகுத்த தானே தனக்குள்ள சர்வசுதந்திரத்தை ஒட்டி விருப்பப்பட்டது. இந்த திட்டத்தை நிறைவேற்றி வைக்க நமது பூலோகத்தில் ஒரு மையத்தை நிலைநாட்ட எண்ணியது. அந்த எண்ணத்தின்படி மாஸ்டர் சி.வி.வி. அவர்களைத் தேர்ந்தெடுத்து 1910-ம் ஆண்டு மே மாத இறுதியில் அவரோடு தன்னை இணைத்துக் கொண்டது. ஆக சிருஷ்டிப் பிரம்மம் தானே நேரிடையாக வந்து மாஸ்டரோடு இணைந்து இந்த யோகப் பயிற்சியை இப்பூலகில் துவக்கியிருப்பதால் இதை டேரக்ட் லைன் - நேர்வழி என்று அழைக்கிறோம். விருப்பப்பட்ட மக்களுக்கு தீட்சையளித்து தேர்ச்சியளிக்க வேண்டுமென்ற சுயவிருப்பத்தின் பேரிலேயே சிருஷ்டிப்பிரம்மம் இந்த யோகப்பயிற்சி முறையை மாஸ்டரிடம் ஒப்படைத்துள்ளது. இதையொட்டியே மாஸ்டரும் உடனடியாக தன்னைச் சுற்றியிருந்த நண்பர்களையும் உறவினர்களையும் ஒரு குழுவாகச் சேர்த்து தீட்சை அளித்து, யோகாலய மித்திர சங்கம் என்கிற இந்த சங்கத்தை 1910 மே மாதம் 29-ம் தேதி தோற்றுவித்தார்.

இந்த நூதன பரிணாம வளர்ச்சித் திட்டத்தில் விருப்பம் உடைய மக்களை சிருஷ்டிப் பிரம்மமே தானாக ஈர்த்து மாஸ்டரிடம் வந்து தீட்சை பெறும்படி செய்து அவர்கள் மூலகமாகவே இந்த திட்டம் விரிவு செய்யப்பட்டு வருகிறது.

மனித சமுதாயம் முழுமையும் இந்த யோகம் பரவவேண்டும் என்பதே சிருஷ்டிப் பிரம்மத்தின் நோக்கமாகையால் காலக்கிரமத்தில் எல்லோரும் தாமகாவே இந்த யோகதீட்சை பெறும்படி யோகாலயத்திற்கு ஈர்க்கப்படுவார்கள் என்ற காரணத்தினாலேயே ஏதும் விளம்பரம் தேவையில்லை என்று கருதப்படுகிறது. பரிணாம வளர்ச்சியில் உலோகம(தாது), தாவரம், மிருகம் என்ற மூன்று கட்டங்களைத் தாண்டி இன்று நாலாம் கட்டத்திலுள்ள மனித சமுதாயம் எதிர்பார்த்து நிற்கும் யோகம் இதுவேயாகும். இன்றைய மனித சமுதாயத்திற்குகென்றே தோற்றுவிக்கப்பட்ட யோகமும் இதுவே ஆகும்.

யோகத்தில் சேரும் ஒரு மித்திரருக்கு தீட்சையளிக்கப்படும்போது சிருஷ்டிப்பிரம்மத்தின் நுண்துகளான நூதன பிராண அலை ஒரு ஒளிப்பொறியாக அந்த மித்திரரின் உடலில் புகுத்தப்படுகிறது. இந்த ஒளிப்பொறி அவருட்புகுந்து அவருடைய சரீரத்தை சீரமைத்து சாஸ்வதாமாகவும் மாறுபாடில்லாத விழிப்புணர்வோடும், ஆனந்தமயமாகவும், வாழும்படியான புதியதோர் அமைப்பை புணர்நிர்மாணம் செய்து தருகிறது. இத்தகைய அயரா விழிப்புநிலை அழுத்தத்தை இன்றைய மனிதனுடைய பௌதீக உடலமைப்பு தாங்கிக் கொள்ளும் சக்தி பெற்றதாக இல்லை. இந்த குறைபாட்டின் காரணமாகவே சம்பிரதாய யோக பயிற்சிகளின் மூலம் சமாதி நிலையடையும்போது மெய்யுணர்வற்ற மயக்கநிலை ஏற்பட்டுவிடுகிறது. இப்படி மறதிக்குட்பட்ட சமாதி நிலையில் கிட்டும் பேரானந்த நிலையோ, மேலான ஞானமோ நீண்ட நேரமோ சொற்ப நேரமோ கழித்து விழிப்பு நிலைக்கு வந்ததும், தெளிவாக ஞாபகத்திற்கு வராமல் வீணாகிவிடுகிறது. சமாதி நிலையில் மேல் ஆதார நிலைகளில் பெற்ற ஞானத்தையும், இன்ப சுகத்தையும் இன்றுள்ள ஸ்தூல நிலை உணர்வில் நிரந்தரமாக அனுபவிக்க முடியவில்லை. இந்த மேலான ஞானமும் இன்பமும் வெறும் கனவிற்கண்ட காட்சி அனுபவங்களாகவே மறதிக்குள்ளாகி விடுவதைக் காண்கிறோம்.

மேற்கூறிய விதத்தில் சமாதி நிலை அனுபவம், விழிப்பு நிலையில் நீக்கமடைந்து விடக்காரணம், பெரும்பாலும் இந்த சம்பிரதாய பயிற்சி முறைகளில் உள்ள குறைபாடுகளேயென்று கருத முடியவில்லை. நமது சரீர அமைப்பிலுள்ள குறைபாடே முக்கிய காரணம் என்று தெரிகிறது. சமாதி நிலையில் பெறக்கூடிய ஞானங்களும், இன்ப நிலைகளும் நீக்கமற நிலைத்து சாஸ்வதமாக இருக்கும்படி செய்வதற்கான ஒரு மையத்தை இந்த சரீர அமைப்பில் நூதனமாக அமைத்துத் தருவதற்கே இந்த நூதன யோக பயிற்சி முறைஅறிமுகப்படுத்தப் படுகிறது. இக்காரணத்தால் தான் இந்த திட்டம், நூதன பரிணாம வளர்ச்சித் திட்டம் என்று கூறப்படுகிறது. இத்தகையதோர் புணர் நிர்மாணத்தை சிருஷ்டிப்பிரம்மத்தைத் தவிர வேறு எந்த மகோன்னத புருஷனாலும் வெற்றிகரமாக நிறைவேற்றி வைக்கமுடியாது.

எனவேதான் சிருஷ்டி பிரம்மமே மாஸ்டர் மூலம் இந்த நேர்வழியை இப்பூலகில் முதன்முறையாக அறிமுகப்படுத்தியுள்ளது.

சிரஷ்டிப் பிரம்மமே நேரிடையாக ஸ்தூல பிரபஞ்சத்திற்கு இறங்கி வந்து நிரந்தரமாக வாழக்கூடிய ஒரு புது சமுதாயத்தை புணர்நிர்மாணம் செய்து வருகிறது.

நமது யோகாலயத்தின் மாஸ்டர் அவர்களே சிருஷ்டிப்பிரம்மத் தினிடமிருந்து நேரிடையாக இந்த நூதன பிராண அலை ஒளிப்பொறியை தன் ஸ்தூல சரீரத்தில் பெற்றுக்கொண்ட முதல் தெய்வீக புருஷராவார். அவர் மூலமாகவே இந்த புணர்நிர்மான திட்டம் விரிவாக்கப்பட்டு நாளடைவில் உலக சமுதாயம் முழுமையும் நிறைவேற்றி வைக்கப்படும்.

மனிதனுடைய சரீரத்தை மூலப்பிரக்ருதி என்ற தத்துவத்தைக் கொண்டு ஏழு ஆதார உணர்வு நிலைகளாக மனிதனுடைய குண்டலினி நிர்மாணம் செய்துள்ளது. இக்குண்டலினிக்கு ஒரு உண்மையான மையம் இல்லாமல் இருப்பதே தியானத்தின் போது சமாதி நிலையில் மறதி நிலை - மயக்கநிலை - மாறுபாடான உணர்வு நிலை ஏற்படக் காரணமாக இருக்கிறது. இந்த குண்டலினியானது தெய்வமில்லாத புதிதாக கட்டப்பட்ட ஒரு கோயிலைப்போல் ஒரு நாதனில்லாத குண்டலினியாக தற்சமயம் விளங்கி வருகிறது. தற்போதுதான் சிருஷ்டிப் பிரம்மத்திலிருந்து இறங்கி வந்துள்ள பிராண அலை ஒளிப்பொறியானது குண்டலினியின் நாதனாக செயலாற்ற முனைந்துள்ளது.

இந்த நூதன பிராண அலை இன்றுள்ள மனித சரீரத்திலுள்ள குண்டலினியில் மையங்கொண்டு, தன் சக்தி அலைகளை உள்ளும் புறமும் வியாபிக்கச் செய்து, உண்மையிலேயே சுந்தந்திரமாக, தன்னிறைவு பெற்ற ஒரு புருஷனைச் சிருஷ்டித்துத் தருகிறது. நூதன பிராண அலை மையங்கொண்டுள்ள குண்டலினியால் புதிதாக உண்டாக்கப்படும் பௌதீகப் பொருளைக் கொண்டு மூலதார நிலையிலிருந்து மஹாபர நிர்வாண நிலை வரையிலுள்ள ஏழு ஆதார நிலைகளும் ஒரே சரீரமாக வேலை செய்யும்படி ஒருங்கிணைக்கப்படுகிறது. இந்த ஏழு ஆதார மையங்களும் இணைக்கப்பட்டு ஒருமித்து வேலை செய்யும்படி சீரமைப்பு - புணர் நிர்மாணம் செய்யப்படுகிறது. இதனால் ஏழு கோசங்களும் ஒரே கோசமாக இயங்கும்படி செய்யப்படுகிறது.

சாதகனின் உடலில் புகுத்தப்படும் நூதன பிராண அலை ஒளிப்பொறி, அதிமேலாயுள்ள பரப்பிரம்மத்தினிடமிருந்து கீழாயுள்ள ஸ்தூலப் பிரபஞ்சத்திற்கு இறக்கி நேர்வழியில் கொண்டுவரப்பட்டு சாதகனது குண்டலினிக்குள் புகுத்தப்பட்ட ஒன்றாகும். தீட்சை பெற்ற அந்த வினாடியிலிருந்தே இந்த ஒளிப்பொறி, இந்த ஏழு ஆதார கோசங்களிலுமுள்ள வெற்றிடங்களை நிரம்பச்செய்து, சூக்ஷமமாக நிலைபேறுபெற்று, இந்த ஏழு ஆதாரங்களையும் ஒன்றிணைத்து இயக்கும் ஆற்றலைப்பெறுகிறது. நமது தொடர்ந்த பயிற்சி மூலம் இந்த நிரப்புதலும் நிர்மாணித்தலுமாகிய கட்டுமானப்பணியே தொடர்ந்து நடைபெற்றுவருகிறது. இந்த யோகாலயம் இந்த புணர்நிர்மாணப் பணியைச் செய்து, புது பரிணாம வளர்ச்சி திட்டத்தை நிறைவேற்றி வைப்பதன் மூலம் இதுவரை இருந்துவந்த சிருஷ்டிக் குறைபாடுகளை நிவர்த்தி செய்து சாஸ்வத சுதந்திர பேரின்ப வாழ்வை அனுபவிக்கும் ஒரு புதிய மனித சமுதாயத்தை உண்டாக்கித் தருகிறது.

இந்த நூதன பரிணாம வளர்ச்சி திட்டத்தின் பயனாக மனித சமுதாயத்தைப் பீடித்து நிற்கும் சகல கொடுமைகளும் ஒழிக்கப்பட்டு ஜீவன் முக்திநிலை பெறும்படி செய்யப்படுகிறது. முடிவில் மரணமற்ற ஜீவன் முக்திநிலை எல்லோருக்குமே கைகூடப் பெறுவதால், எமதர்மனும் கூட தன் உயிர் நீக்கும் துன்பப் பணியிலிருந்து ஒரு காலத்தில் விடுதலை பெற்று விடுவான் என்று ஒரு பழைய கிரந்தத்தில் கூறப்பட்டுள்ளது போலும்.

## கிரகங்களுக்கான மாஸ்டர் கொடுத்த மந்திரங்கள்:

ஏழு கிரகங்களின் ரெகுலேஷன்களால் நமது லிங்க கோசத்தில் பதியப்பட்ட சக்திகளை மித்திரர்களுக்கு அவரவர் வீதாசாரப்படி விநியோகம் செய்யும் வேலையை முழு (தூலப்) பிரக்ஞையுடன் / ஏக உணர்வுடன் நடத்துவதற்காக ஏற்பட்ட யோகம்.

Seven planets regulations deposit workings destruction turn out physical consious work out short form course- செவன் ப்ளானெட்ஸ் ரெகுலேஷன்ஸ் டெபாஸிட் ஓர்க்கிங்ஸ் டிஸ்டிரிப்யூஷன் டர்ன் அவுட் பிஸிகல் கான்ஷியஸ் ஓர்க் அவுட் ஷார்ட் பாரம் கோர்ஸ்.

Planetary leading sukra work deposit workings distributions turn out. ப்ளானிடரி லீடிங் சுக்ரா ஒர்க் டெபாசிட் ஒர்க்கிங்ஸ் டிஸ்ட்ரிப்யூஷன் டர்ன் அவுட்.

Key to Sukra leading : Air vertical set up start - கீ டு சுக்ரா லீடிங், ஏர் வார்டிகல் செட் அப் ஸ்டார்ட்.

Key to Satrun leading : Other planets instruments inhaling waves saturn bukthi work waves - கீ டு ஸேடர்ன் லீடிங் அதர் ப்ளானெட்ஸ் இன்ஸ்ட்ரூமெண்டு இன்ஹேலிங் வேவ்ஸ் ஸேடர்ன் புக்தி ஒர்க் வேவ்ஸ்.

Key to Sun leading : Master millions of throws - கீ டு சன் லீடிங், மாஸ்டர்ஸ மில்லியன்ஸ் ஆப் த்ரோஸ்

Key to Moon leading : Diamond M.T.A recurring throws - கீ டு மூன் லீடிங் : டையமண்ட் எம்.டி.எ. ரெக்கரிங் த்ரோஸ்.

Key to Budha leading : Retortion ground monad workings most tyre rings - கீ டு புதா லீடிங் : ரிடார்ஷன் க்ரௌண்ட் மோனட் ஒர்க்கிங்ஸ் மோஸ்ட் டையர் ரிங்க்ஸ்.

Key to Guru leading : Fixed kundalini leadings breadth springs - கீ டு குரு லீடிங் : பிக்ஸட் குண்டலினி லீடிங்ஸ் ப்ரெத் ஸ்பிரிங்ஸ்.

Key to Sukra work : Sukra work deposit workings distribution turn out - கீ டு சுக்ரா ஒர்க் : சுக்ரா ஒர்க் டெபாசிட் ஒர்க்கிங்ஸ் டிஸ்டிரிப்யூஷன் டர்ன அவுட்

Physical conscious work out, C.V.V. own Adjustment - பிஸிகல் கான்ஷியஸ் ஒர்க் அவுட் சி.வி.வி மாஸ்டர்ஸ் ஓன் அட்ஜஸ்ட்மெண்ட்.

இவை அனைத்தும் கும்பகோணத்தில், யோக ஆலயத்தில் தான் செய்ய வேண்டும்.

# இணைப்பு

**பூர்த்திக்குப்பின் பூமியை சுயஞ்ஜோதியாக திகழும் என்பது மாஸ்டர் வாக்கு**

பூமியின் (23½) டிகிரி சாயலை நிமிர்த்தி, தன் சக்திகளையும், ஞானங்களையும் அதனுள் புகுத்தி, பூமியை ஓர் நிலைக்குக் கொண்டு வந்து பூமிக்கு சாசுவதத்தை அளித்து மனித சமுதாயத்திற்கும் சாசுவதம் தந்து, கோள்கள், யாவும் மாஸ்டர் உத்திரவுப்படி நல்லதையே செய்யும்படி அமைக்கும் திட்டத்தில், பூமியிலிருந்தே இவ்வேலைகள் அனைத்தும் இயக்க முடியாத சூழ்நிலை ஏற்பட்டது. பூமியை எந்த சக்தியாலும் அழிக்க முடியாதபடி Horn - Cover என்ற கவசம் போட்டார். தான் பூமிக்கும் அப்பால் Albit Portion என்ற ஓர் இடத்தை அமைத்துக் கொண்டு, நமது யோகா ஸ்கூலுக்கும் அதற்கும் ஓர் துடர்பு ஏற்படுத்திக் கொண்டார். (இதனால் மாஸ்டரிமிருந்து எந்த சக்திகளோ, ஞானபாகங்களோ Direct நேரிடையாக நமக்குக் கிடைக்கவும், நாம் செய்யும் பிரார்த்தனைகளினால் நமக்கும் மாஸ்டருக்கும் நேர் – துடர்பு ஏற்படவும், பெரும் பாக்யம் பெற்றுள்ளோம். இதன் காரணம் தான், மேலே கூறியுள்ள சூழ்நிலையில் மாஸ்டர் தன் திட்டப்படி ஸ்தூலத்தைவிட்டு 12th May 1922 மறைந்தார்.

எந்த அனுவானது முதன் முதலாக சிருஷ்டியைத் துவங்கியதோ அந்த One Point -உடைய (Mind) மையிண்டில் சிறிதளவு அசைவைக் கொடுத்து மரணத்தின் பிடியில் சிக்கியுள்ள ஒரு நோயாளியின் சரீரத்தை காப்பாற்றி எழுப்ப நிர்வாணிக் ஆதாரத்தினுடைய அனுமதியை உனக்கு கொடுப்பதில் மகிழ்ச்சியடைகிறேன். உனக்கு அம்மாதிரி மரணத்திலிருந்து விடுவிக்கும் சக்தி கொடுக்கப்படுகிறது. இது மித்திரர் அல்லாதவர்களுக்கு தெரியாத ரகசியம். (19–06–1911)

# ஏழு சக்கரங்கள்




பிரம்மத்தின் ஒரு ஆட்டத்திற்கும் அசைவிற்கும் நிகழ்ச்சிக்கும் ஆதார அடிப்படையாக இருப்பது சக்தி. இந்த சக்தி (எனர்ஜி) அமையவில்லையென்றால் ஆட்டமில்லை. எந்த ஒரு நிகழ்ச்சியும் இல்லை. இந்த எனர்ஜி பல ரூபங்களில் வெளிவருகின்றன. நமது ஸ்தூலம் (உடல்) உள்ளிருந்து ஸ்தூலத்தை (உடலை) இயக்கும் உயிர் அணு (எனர்ஜி) பிரம்மத்தின் வேறொரு உருவமே அல்லது வடிவமே.

பிரம்மத்தின் சக்தியை உயிர் அணுசக்தியாக உருவமாற்றம் தந்து ஸ்தூலத்தை செயல்படவைப்பது நமது உடலில் இருக்கும் ஏழு சக்கரங்கள் என்று சொல்லும் எனர்ஜி மையங்கள் இந்தச் சக்கரங்களை சி.வி.வி யோக மித்திரர்கள் அல்லாத மனிதர்களின் கண்ணால் பார்க்க இயலாது. விஞ்ஞானிகளாலும் தெரிந்துக்கொள்ள முடியாது. இந்த சக்கரங்கள் கண்ணுக்கு தெரியாத நமது சூட்சுமத்தில் அமைந்துள்ளது. நமது பரு உடலுக்கு ஆதாரமாக உள்ளது. நமது ஸ்தூலத்தை நிர்ணயிப்பதும் இந்தச் சக்கரங்கள்தான். நமது ஸ்தூலத்தில் உள்ள சக்கரங்களே நம் உயிர் அணுவை இயக்கும் சக்தி (எனர்ஜி) மையங்களாக இருக்கின்றன. பிரம்மத்தின் ஒரு சிறிய அங்கமே மனிதன்தான் கோள்களுக்கும் ஏழு சக்கரங்களுக்கும் உள்ள தொடர்பு இதுவரை சொல்லப்படாத ரகசியங்களை மாஸ்டர் சி.வி.வி 1910–ஆம் ஆண்டே எல்லோரும் அரியும்படி சொல்லிவிட்டார்கள்.

# ஓலிடியர் பிட்யூடரி ரெகுலேஷன் 3-வது நேம் விளக்கம்

முதலாவது நாம் ஓலிடியர் பிட்யூடரி ரெகுலேஷன் என்ற வார்த்தைகளின் அர்த்தத்தைப் புரிந்துகொள்வோம். ஓலிடியர் என்ற வார்த்தை ஆங்கில அகராதியில் இல்லை. இது லத்தீன் மொழி வார்த்தையாக இருக்கலாம். இது ஒருவருடைய பிரக்ஞையைக் குறிக்கும். பிட்யூடரி என்பதை மாஸ்டர் ஒரு விஷேச அர்த்தத்தில் உபயோகப்படுத்தியுள்ளார். நமது மூளையில் உள்ள ஒரு சுரப்பியும் பிட்யூடரி என்று அழைக்கப்பட்டு வருகிறது. யோகக் குறிப்பில் பிட்யூட்டரியைப் பற்றி பல விளக்கங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இங்கு உருவங்களையோ ( Figures - பிகர்களையோ) இடங்களையோ (Space - ஸ்பேஸையோ) உண்டாக்கக்கூடிய ஒன்று என்ற அர்த்தத்தில் உபயோகப்படுத்தப்பட்டிருக்கிறது.

குண்டலினிக்கும், பிட்யூட்டரிக்கம் அடிப்படை வித்தியாசமுண்டு. பிட்யூடரி நாலாபக்கங்களிலும் கதிர் அலைகளைப் பரப்பக்கூடிய சக்தி உடையது. அது முட்டை வடிவமானது. குண்டலினி வரம்புக்குட்பட்ட உருவங்களைப் படைக்கக் கூடியது. இயற்கையாக கதிர் இயக்கம் இல்லாதது. தூண்டப்படும்போது மட்டும் அளவான கதிர் இயக்கம் பெறக்கூடியது. குண்டலினிக்கு ஒரு மத்தியும்-சென்டரும் - போர்வைகளும் கவர் (Cover) களும் உண்டு. பிரபஞ்சத்தில் பல வேறு சிருஷ்டிகள் உள்ளன. பொதுவாக எல்லா சிருஷ்டிகளுக்கும் பிட்யூடரியே காரணமாகும். அது மேலிடத்தில் ஆகாயத்தின் உச்சஸ்தானத்தில் நடைபெறுவதாகும். இந்த இடம் Dip-டிப் நிலையாகும். இந்த பிரபஞ்ச சிருஷ்டிப் பரிணாமத்தில் இது வரை 9 பிட்யூடரி சிருஷ்டிக்கிரமங்கள் நடைபெற்று முடிந்துள்ளன. தற்போது நாம் 10-வது பிட்யூட்டரியின் சிருஷ்டிக் கிரமத்தின் ஆரம்பத்திலிருக்கிறோம். ஓலிடியர் சிருஷ்டியின் 10-வது சிருஷ்டிக்கிரமமே ஒக்ஸிடியர் - Occidere சிருஷ்டியாகும். ஒக்ஸிடியர் சிருஷ்டியில் எல்லா திக்குகளிலும் கதிர் வீச்சும் இருக்கும். ஆகையால் முன்னிலிருந்து பின்புறமும் பின்னாலிலிருந்து முன்பு புறமும் உள்ளும் புறமும் ஒரு கண்ணாடி உருண்டையின்

மத்தியிலிருந்து பார்ப்பதுபோல் எல்லா பக்கமும் பளிங்காகத் தெரியும். பிரக்ஞாபங்கம் இருக்காது. பிரக்ஞைக்கு எந்த நிலையிலும் தடை ஏதும் இருக்காது. ஓலிடியர் ரெகுலேஷனின் 9 நேம்களும் முதல் சிருஷ்டிக் கிரமத்திலிருந்து 9-வது சிரஷ்டிக்கிரமம்வரை படிப்படியாக வளர்ச்சியடைந்து வந்தள்ளன. மேம்பாடடைந்து வந்துள்ள நிலைகளையே குறிக்கும். மேனிபஸ்டேஷன் - Manifestation அதாவது சிருஷ்டியாதல் - வெளிப்பாடடைதல் என்பதை நன்கு புரிந்து கொள்ளவேண்டும். சிருஷ்டி என்பத வெறும் பௌதீக சிருஷ்டியை மட்டும் குறிக்காது. குணமும் ரூபமும் அளவும் எடையும் எல்லாமே சிருஷ்டியமைப்பை ஒட்டியவை தான். சூன்யத்தை "அ" என்று வைத்துக் கொண்டால் அந்த நிலையில் வேறொன்றும் சிருஷ்டிக்கப்படாத இரண்டற்ற சமஷ்டி நிலையையே அது குறிக்கும். அதை ஆரிஜினுக்கு ஆரிஜின் - ஆரம்பத்தின் ஆரம்பம்- முதற்காரணத்தின் காரணம் என்று அழைக்கலாம். இந்த நிலையை ஒருவர் தன் அநுபவத்தில் காணாத வரை என்னவென்று வரையறுத்துக் கூறமுடியாது. குணமுடைய ஒன்று சிருஷ்டிக்கப்பட்டதென்றால் அதற்குமுன் குணமற்ற அதாவது நிற்குணமான ஒன்று அதற்கும் முற்பட்டதாய் இருந்திருக்கத் தானே வேண்டும். இந்த நிலைகளை மாஸ்டர் நில்-கான்-லெஸ் -எம்டி-வேக்குவம் - நதிங் - நாட் - நோ - நௌ - நன் - வாயிட் - வேகண்ட் - நிஹில் -( Nil - Gone - Less - Empty - Vaccum - Nothing - Not - No - Now - None - Void - Vacant - Nihil ) என்று 13 நிலைகளாகக் குறிப்பிட்டுள்ளார். இந்த ஒன்றுமேயில்லாத வெட்டவெளியான சூன்ய நிலையிலிருந்தே சிருஷ்டியானது துவங்கியுள்ளது. இந்த இடத்தை ஒரு சுற்று வட்டத்தின் அல்லது ஒரு உருண்டையின் முதல் புள்ளியாக வைத்துக் கொள்வோம். இந்த சுற்று வட்டம் முடியும் தறுவாயில் கடைசி புள்ளியானது முதற்புள்ளியை தொடும்போது அதை துளைத்துச் செல்ல முடியாமையால் அதோடு மோதிக் கொண்டு தடம்மாறி சிதறுகிறது. இடமாற்றம் பெறுகிறது. நில் என்பதை முதல் புள்ளியாகக் கொண்டால் அதை அதன் கடைசி புள்ளி தொடும்போது ட்ரூத்மோஷன் ஆரம்பமாகிறது. ட்ரூத்-இயக்கம் பெறுகிறது. ஒரு வட்டம் முடிந்தால் ஒரு குண்டலினி முடிவுபெறுகிறது. எந்த படைப்புக்கும் பிட்யூட்டரிதான் ஆரம்பப் புள்ளியாகிறது. இதுவரை ஓலிடியர் தத்துவமே பிட்யூட்டரியை இயக்கி வந்திருக்கிறது. ஓலிடியர் தத்துவம் 1 என்ற உருவப்படி வேலை செய்கிறது. 1 என்ற குறியில் முன்பக்கம் மட்டும் தெரிகிறது.

அதன் பின் பக்கம் தெரிவதில்லை. ஏனெனில் முன்பக்கம் பின்பக்கத்தை மறைத்துக் கொண்டிருக்கிறது. ஆகவே ஓலிடியர் 9 பிட்யூடரி சிருஷ்டிகளிலும் குறைப்பிரக்ஞையே பாதிப் பிரக்ஞையே /பாதி உணர்வு வேலை செய்வதாகக் கொள்ள வேண்டும். ஓக்ஸியர் வேலையின் போதுதான் குறைவற்ற முழுப்பிரக்ஞை வேலை செய்யும்.

இனி ஓலிடியர் 3-வது நேமுக்கு வருவோம். " டிப், டீப், ஆக்ஸிஸ், அரேன்ஜட், அவர்ஸ், ஹையர் பிரிட்ஜ், பிகினிங் டூரூத் லெவல்ஸ், நில் நன் நாட் லெவல்ஸ், நார்மல் டெம்பரமென்ட் டைம் எக்ஸ்பாண்ட், எலைக்ட்ரிக் ஹின்ட், ஈதர் ஓர்க்அவுட், ஈக்வேடர் ஈக்வல், பிட்யூடரி ஹின்ட் ஹிட்டன்ஸ் சர்கம்பெரென்ஸ் சைட்வேஸ் மில்லர் பாரம் சென்டர், வர்டிகல் லெவல்ஸ் மீட் சென்டர்ஸ் " இது முதல் 2 நேம்களுக்குப் பிறகு 3-வதாக வருகிறது. இது Dip-டிப் லெவலிலிருந்து ஆரம்பமாகிறது. டிப் லெவலிலிருந்து செங்குத்தாக Deep-டீப் லெவலுக்கு ஒரு கோடிட்டு இந்த இரண்டு லெவல்களையும் தொடும்படி ஒரு வட்டம் வரைந்தால் X-எக்ஸ் என்ற குறுக்கு அச்சும் Y-ஒய் என்ற நெடுக்கு அச்சும் கொண்ட (இரு Axis கள் கொண்ட) ஒரு மெமோரெண்டம் உண்டாகும். இந்த மெமோரெண்டம் ஏற்பட்டதும் அதற்கொரு சென்டர் Center- மத்தி நிர்ணயிக்கப்படும். அந்த சென்டரைக் கொண்டு சுற்று வட்டத்தில் கடிகாரத்தின் சுற்றில் ஒன்று. இரண்டு என்று மணிக்கணக்கு Hours -அவர்ஸ் கணக்கு குறிக்கப்படுவதுபோல டிகிரிகள் Degrees- குறிக்கப்பெறுகிறது. எந்த ஒரு வட்டத்திற்கும் குண்டலினிக்கும் நாலு Quarters- குவார்ட்டர்ஸ் கால் வட்டங்கள் உண்டு. நான்கு கால் வட்டங்கள் முடிந்ததும் அடுத்த கட்டவேலை ஆரம்பமாகும். இதுவே டிப்-டீப்-ஆக்ஸிஸ்-அரேன்ஜட் - அவர்ஸ் ஆகும். இங்கிருந்து ட்ரூத் மோஷன் துவங்கி ஆதிக்கம் ஆதியோடு சம்பந்தம் - தொடர்பு ஏற்படுகிறது.

இந்த தொடர்பு ஏற்பட இடையில் ஒரு பாலம் அமைப்பது அவஸ்யமாகிறது. இந்த பாலம் இல்லாவிட்டால் படைக்கப்பட்ட ஒன்றானது தன் படைப்புக்குக் காரணமான ஆதியின் ஆதியோடு தொடர்புகொள்ள இடையிலுள்ள நிர்குண நிலைகள் அனுமதிக்காது. வழிப்புணை ஏற்படுத்தாது. ஆகவே எங்கு ட்ரூத்மோஷன் ஆரம்பிக்கிறதோ அங்கிருந்து ஒரு பாலம் அமைக்கப்பட வேண்டும். அப்போதுதான் படைக்கப்பட்டவை படைப்பாளியோடு - ஆதியோடு நேர்த்தொடர்பு கொள்ளமுடியும். இதுவே ஹையர் பிரிட்ஜ் பிகினிங் Higher Bridge Begining. பிகின் தான் ஆரம்பநிலை. அசைவின், மோஷனின், ஆரம்பப் புள்ளியே பிகின். பிறகு டூரூத் நகர ஆரம்பிக்கிறது. இந்த அசைவில் வேகம் உண்டாகிறது ஸ்பீட் Speed- உண்டாகிறது. இதனால் ஆதிக்கும் அசைந்தோடும்

டூருத்துக்கும் இடையே தூரம் அதிகமாகிறது. இடைவெளி அதிகமாக அதிகமாக வேகமும் அதற்கேற்ப குறைகிறது. அந்த சமயம் டிரிக் - மாயை போர்வைபோல் அதை மூடிக் கொள்கிறது. தூரம் அதிகமாக அதிகமாக அதற்கேற்ப மாயையின் அளவு அதிகமாகி ட்ரூத்தின் அளவு குறைகிறது. முதல் கால் வட்டத்தின் முதற்புள்ளியில் சுத்தமான டூருத்தைப் பார்க்கலாம். இந்த இடம்தான் நில் - நன் - நாட் (Nil - None - Not) லெவல்களாகும். இவை மூன்றையும் சமநிலைகளாகக் கொள்ளலாம். இனி மோஷனைக் கவனிப்போம். எந்த மோஷனுக்கும் - இயக்கத்திற்கும் ஆரம்பம் இருக்கும். இந்த ஆரம்ப நிலையில் இரு தன்மைகள் வேலை செய்யும் - ஒன்று அசையும் நிலை, மற்றொன்று அசையா நிலை. சிருஷ்டியாம்சத்தின் இந்த ஆரம்ப நிலையே நார்மல் டெம்பரமென்ட் ( Normal Temperament) என்று அழைக்கப்படுகிறது. இந்த இயங்கும் நிலையில் தான் வேகம் உண்டாகும். இந்த உத்வேகத்தின் காரணமாக மேலும் இரண்டு தன்மைகள் ஏற்பட்டன. ஒன்று காலம் - மற்றொன்று இடம் - ஸ்பேஸ். வேகம் அதிகரிக்கும் போது தூரம் அதிகரித்து அதற்கான காலமும் - டைமும் - Time மும் அதிகரிக்கிறது. இந்த நிலையில் டூருத் கவரப்பட்டு மூடப்பட்டு அதுவே மாயையின் டிரிக் Trick- ன் இயக்க வேகமாக பரிணமிக்கிறது. இதுவே டைம் எக்ஸ்பாண்ட் எலெக்ட்ரிக் ஹின்ட் - Time Expand Electric Hint ஆகும்.

இந்த அசைந்த நிலையில் என்ன ஏற்படுகிறது? எனெர்ஜி Energy - சக்தி ஏற்படுகிறது. எங்கே? ஈதரில். ஆகாய வெளியில், சுத்தமான ஈதரானது, சூடான - ஈதர் என்றும் குளிர்ச்சியான ஈதர் என்றும் இரண்டாகிறது. ஈதர் பல வகைப்படும். இவை குளிர்ச்சியான ஈதர் - சூடான ஈதர் - காற்று ஈதர் - குளிர்ச்சியும், உஷ்ணமும் கலந்த காற்று ஈதர் - ப்ளேஸிங் இருட்டு ஈதர் என்பனவாகும். இந்த பல்வேறு ஈதர்களின் இடையே டிரிக்கின் இயக்கத்தால் ஏற்படும் மோதல்களின் காரணமாக எலெக்ட்ரிஸிடி - மின்சாரம் ஏற்படுகிறது. இந்த மின்சாரத்திற்கு உருவம், குணம், இடம், பருமன் என்ற பல பரிணாம மாற்றங்களை உண்டாக்கக் கூடிய சக்தியுண்டு. இந்த மின்சாரத்தின் இயக்கமே சிருஷ்டியாம்சத்தின் பல அடிப்படை வேறுபாடுகளுக்கம் காரணமாகியிருக்கிறது. இந்த பல்வேறான சிருஷ்டியாம் சங்களுக்கு ஏதேனும் அடிப்படையான கருத்து - கன்செப்ட் Concept - அல்லது ஐடியா Idea - எண்ணம் இருந்திருக்கவேண்டும் அல்லவா?. இந்த கோட்பாடும் முழுமை பெற்றதா என்றால் அப்படி இல்லை.

இந்த பரிணாம வளர்ச்சியானது சிறுகச் சிறுக மெதுவாக ஆனால் ஒரு ஒழுங்கு முறையோடும் கூடியதாக அமைந்திருக்கிறது. இந்த அமைதியான படிப்படியான முன்னேற்றத்தைக் கொண்ட சிருஷ்டியாம்சம் ஆதியின் - ஆரிஜினின் அடிப்படைக் கருத்தை - குணத்தன்மையை உட்கொண்டதாவே அமைந்திருக்கும். இதுவே ஹின்ட் -Hint குறிப்பாகிறது. ஈதரில் எலெக்ட்ரிக் சக்தியால் இந்த ஹின்டை ஒட்டி ஒழுங்கு முறையோடும் சிறுகச் சிறுகவும் நடைபெற்றுவரும் சிரஷ்டியாம்ச வேலையை ஓர்க் அவுட் Workout - ஆகிறது. ஹின்டை ஒட்டி - இந்த அடிப்படைக் கருத்தை ஒட்டி எலெக்ட்ரிக் சக்தியால் ஈதரில் நடைபெறும் ஓர்க்அவுட் வேலை ஒழுங்கு முறையோடும் விதிமுறைக் கேற்பவும் சில சமயம் குறைந்தும் சில சமயம் மிகுந்தும் சமமான குறுக்களவும், நெடுக்களவும் உள்ள விட்டங்களைக் (டையாமீட்டர்களைக்) கொண்ட ஒரு வட்டத்தில் ஓர்க்அவுட் ஆகிறது. இதுவே ஈதரில் நடைபெறும் ஈக்வேடர் ஈக்வல் Equator Equal- வேலையாகும்.

ஏற்கெனவே பிட்யூட்டரியைப் பற்றி கவனித்தோம். ஒரு பிட்யூட்டரிக்கு எது காரணமாயிருந்ததோ அதுவே எல்லா பிட்யூட்டரிகளுக்கும் காரணமாக ஆதியாக - ஆரம்பமாக இருக்க முடியும். மனிதனுக்குள்ளது போல, பூமிக்கு உள்ளதுபோல, பிரபஞ்சத்திற்கு உள்ளதுபோல இந்த முழு விண்வெளிக்கும் ஒரு ஆரம்ப பிட்யூட்டரி இருக்கவேண்டும். இந்த வரம்புக்குட்பட்ட சிருஷ்டியும் அந்த முதல் பிட்யூட்டரியில் தான் ஆரம்பமாகியிருக்க வேண்டும். இப்போது நாம் 3-வது பிட்யூட்டரியின் சிருஷ்டியைப் பற்றி கவனிக்கிறோம். ஆகவே இச்சிருஷ்டிக் கிரமம் 3-வது பிட்யூட்டரியின் ஹின்ட் - ஐ ஒட்டி - அடிப்படைக் குறிப்பை ஒட்டியே நடைபெறுகிறது. இந்த சிருஷ்டி கீழ்நோக்கிய சிருஷ்டியாக 3-வது பிட்யூட்டரியிலிருந்து ஆரம்பமாகிறது. ஒரு உருண்டை அல்லது வட்டம் - அதன் மத்தியில் ஒரு சதுரம் - அந்த சதுரத்தை இரண்டு முக்கோணங்களாகப் பிரிக்கும் ஒரு குறுக்கு நடுக்கோடு - ஆக்ஸிஸ் -Axis அவை ஒவ்வொன்றையும் இரண்டாகப் பிரிக்கும் செங்குத்தான ஒரு ஆக்ஸிஸ் Axis - இவை இரண்டால் 4 குவார்டர்களாகப் பிரிதல் -

இவை மேலும் இரண்டிரண்டாகி 8 ஆகப்பிரிதல் - இப்படி பல குவார்ட்டர்களாகப் பிரிதல் - இப்படிப் பிரிந்த நிலையிலேயே இச்சிருஷ்டிக் கிரமம் நடைபெற்று வருகிறது. ஒரு உருண்டையை இடத்திலிருந்து வலதிற்கு கோடிட்டு சமமாகப் பங்கீடு செய்தால் மேல் அரை வட்டம் கீழ் அரை வட்டம் என்பதாக அரைக்கிண்ண வடிவத்தில் பிரிவதைப் பார்க்கலாம். இவ்வாறே ஈதரும் இருநிலைகளாகப் பிரிக்கப்படுவதை நாம் ஊகிக்கலாம். இந்த உருண்டையின் மத்தியில் உண்டாகும் ஒரு சதுரரூபமே ஹிட்டன்ஸ் - Hiddens.



படம் காண்க

இதுவே ஆதி அல்லது ஆரிஜின் படிப்படியாக பரிணாம வளர்ச்சியின் மூலம் மனிதனாக வந்துள்ள( ATM - எ.டி.எம்) 84 நிலைகளுக்கும் காரணமாயமைந்திருக்கிறது. இச்சிருஷ்டியாம்சம் ஹிட்டன்ஸின் பக்கவாட்டில் - Sideways - சைட்வேஸில் உண்டான சிருஷ்டி அமைப்புகளாகும். சைட்வேஸில் ஆரம்பித்து சுற்றுவட்டத்தை - சர்கம்பரன்ஸை (Circumferene)- தொட்டுக் கெண்டு ஏற்பட்ட அமைப்பு முறையாகும். இச்சிருஷ்டியாம்சம் மேலும் ஹிட்டன்ஸிலிருந்து வரும் பரிணாம வெளிப்பாடுகள் தொடர்பாகவோ இடையறாததாகவோ இல்லை. நின்று நின்று வெளிப்படுகின்றது. சிருஷ்டியும் அழிவும் மாறி மாறி வருகின்றன. இந்த பக்கவாட்டு வேலை காரணமாக மில்லர் லாக் அண்ட் கீ - (Miller Lock and Key) அமைப்பில் இச்சிருஷ்டியாம்சம் நடைபெறுகிறது. மில்லர் லாக்கை அழுத்தினால் பூட்டிக்கொள்ளும். பிறகு எந்த திக்கிலிருந்து அழுத்தம் கொடுத்தாலும் அதைத் திறக்கமுடியாது. சாவிப் போட்டுத்தான் திறக்கவேண்டும். இதன் காரணமாக இந்த ஹிட்டன்ஸ் சிருஷ்டியாம்சத்தில் ஒரு அடிப்படையான குறை இருந்து வருகிறது. இக்குறை நிவர்த்திக்கப்படுகிற வரையில் இச்சிருஷ்டிக் கிரமத்தில் அழியாமை தத்துவத்தை சாஸ்வதத்தை நிலைநாட்ட முடியாது. இதுவே ஹின்ட் - ஹிட்டன்ஸ் - சர்கம்பரென்ஸ் - சைட்வேஸ் - மில்லர்பார்ம் - சென்டர் - Hint - Hiddens - Circumference - Sideways - Miller Form - Centre ஆகும்.

மேலே கூறப்பட்ட 84 நிலைகளும் ஹிட்டன்ஸுக்கு செங்குத்தாகத் தான் இருக்கின்றன. ஆனால் இவற்றின் சென்டர்கள் - மத்தியில் - ஹிட்டன்ஸ் சென்டருக்கு நேர் செங்குத்தாயில்லை. தற்போதுள்ளதுபோல் ஹிட்டன்ஸின் பக்கவாட்டிலிருந்தல்லாமல் அதன் மத்தியிலிருந்து பிராணகதியின் ஓட்டம் ஆரம்பித்து நேர் செங்குத்தாக வந்து இந்த 84 லெவல்களின் சென்டர்களும் டிப்பிலிருந்து டீப் வரை ஹிட்டன்ஸ் சென்டருக்கு நேர்க்கோட்டில் அமைந்திருக்குமானால் பிராண சக்தியின் ஓட்டம் நேராகவும் தொடர்பாகவும் சாஸ்வதத் தன்மையுடையதாகவும் இருக்கும். இதுவே வர்டிகல் லெவல்ஸ் மீட் சென்டர்ஸ் - **Vertical Levels Meet Centres** என்ற வார்த்தைகளின் குறிப்பாகும்.

மற்ற நேம்கள் பல இருப்பினும் நமது நேர்முறை சிருஷ்டி வேலைக்கு ஆரிஜினோடு நேர் சம்மந்தமுடைய சிருஷ்டிக்கு - டைரக்ட் லைன் ஒர்க்குக்கு (**Direct Line Work**)- நம் நூதன சிருஷ்டி முறைக்கு இந்த ஓலிடியர் ரெகுலேஷன் மிக முக்கியமான ரெகுலேஷனாகும். மேலும் மனிதனுடைய அமைப்புகூட பிரபஞ்ச அமைப்பின் பிரதிபிம்பமே என்பதை நாம் கருத்தில் கொள்ள வேண்டும். இன்று வரையும்கூட மனித ரூபத்தில் மூலகபால மத்திக்கும் குண்டலினி ஸ்தானத்திற்கும் நேர் தொடர்பு இல்லை. மனித ரூபத்தில் எல்லாம் செங்குத்து நிலைகளும் ஹிது, சகஸ்ராரா இவற்றோடு நின்றுவிடுகின்றன. சகஸ்ராரா இன்னர்லோட்டஸ் இவை இரண்டுமே நேர் செங்குந்தான நிலையில் இருப்பதாகக் கொள்ள முடியாது. பிராண சக்திப் பிரவாகத்தை ஸ்தூலத்தில் வாங்கிக் கொள்வதற்கான குழாய் அமைப்பு இதற்குமேல் அமைந்திருக்கவில்லை. ஆகவே மஹாபர நிர்வாண லெவலில் ஒரு சென்டர் அமைக்கப்பட வேண்டும். அதிலிருந்து சுழிமுனைக்கு செங்குத்தான குழாய் தொடர்பு ஏற்படுத்தி அதன் மூலம் பிராண சக்திப்பிரவாகம் குண்டலினியை அடையும்படி செய்யவேண்டும். இவ்விதம் பிரபஞ்சத்தையும் மனிதனையும் இந்த டைரக்ட் லைனுக்கு சிஷ்டி முறைக்கு ஆயத்தப் படுத்தவே - தயார்படுத்தவே இந்த ஓலிடியர் ரெகுலேஷன் 3-வது நேம் கொடுக்கப்பட்டுள்ளது. இந்த ரெகுலேஷன் வழிமுறையில் அல்லாமல் ஆரிஜினுக்கும் மனிதனுக்கும் - ஆரிஜினுக்கும் அதன் படைப்புக்கும் இடையே நேரிடையத் தொடர்பு ஏற்படுத்த முடியாது.

**ஒலிடியர் ரெகுலேஷன் 3-வது நேம்**
**யோகம் பயில்வோரின் நலனுக்காக,**
**இந்த மந்திரங்கள் இங்கே கொடுக்கப்படுகிறது.**

## ஆங்கிலத்திலேயே சொல்லவும்

| | |
|---|---|
| Master Namaskaram | - மாஸ்டர் நமஸ்காரம் |
| Dip Deep | - டிப் டீப் |
| Axis Arranged Hours | - ஆக்ஸிஸ் அரேன்ஜடு அவர்ஸ் |
| Higher Bridge Beginning | - ஹையர் பிரிட்ஜ் பிகினிங் |
| Truth Levels | - ட்ரூட்த் லெவல்ஸ் |
| Nil None Not Level's | - நில் நன் நாட் லெவல்ஸ் |
| Normal Temparament | - நார்மல் டெம்பரமெண்ட் |
| Time Expand | - டைம் எக்ஸ்பேன்ட் |
| Electric Hint | - எலெக்ட்ரிக் ஹின்ட் |
| Ether Work Out | - ஈதர் வொர்க் அவுட் |
| Equator Equal | - ஈக்வேட்டர் ஈக்வல் |
| Pituitary Hint | - பிட்யூடரி ஹின்ட் |
| Hidden Circumference | - ஹிடன் சர்க்ம்ஃபரன்ஸ் |
| Side Ways | - ஸைடு வேய்ஸ் |
| Miller Form Center | - மில்லர் ஃபார்ம் சென்டர் |
| Vertical Levels | - வர்டிகல் லெவல்ஸ் |
| Meet Centres | - மீட் சென்டர்ஸ் |
| Master Namaskaram | - மாஸ்டர் நமஸ்காரம் |

## சி.வி.வி. யோகம் பயின்றவர்கள் மரணத்திற்கும் மற்றவர் மரணத்திற்கும் உள்ள வித்தியாசம்

இதுவரை மனுஷன் மரணமடைந்து ஸ்தூலதேகம் நாசமடைந்த பிறகு லிங்க சரீரம் சிதறி காற்றில் கலந்து அரூபம் அடைந்தவுடன் எவ்வளவு சித்தி அடைந்தவர் ஆனாலும் திரும்ப மானுட ஜென்மத்திற்கு வருவார். இப்பொழுது உபதேசம் பெற்றுக்கொண்டு இந்த யோகம் செய்பவர் புராதன சிருஷ்டியில் ஜென்மம் அடைந்ததால் பூமியிலிருக்கிற குறைகளாலும் மரணமடைந்து ஸ்தூல தேகம் விட்ட பிறகும் ஜீவாத்மா, சூட்சுமம், பிராண கலை மூன்றும் உள்ளடக்கம் பெற்ற லிங்க சரீரம் (ஈதர்) சிதறி காற்றிலே கலந்து அரூபம் அடையாமல் இந்த (ஈதர்) ரூபத்திலேயே இருந்து பூமியின் சரிவு நேரான நிலைக்கு வந்தவுடன் நூதன சிருஷ்டி ஆரம்பித்த பிறகு திரும்ப ஸ்தூல தேகத்தை அடைவார்கள். இதுவே இந்த யோகத்தின் உண்மை.

# 13 பிளானெட்டரி ஃபோர்ஸ்

படைப்பின் எல்லா உண்மைகளும் புரிந்துக்கொள்ள ஜோதிடம் ஒருவிதத்தில் அவசியமாகிறது. வேதத்திற்கான ஆறு முறைகளில் ஜோதிடம் முதலில் நிற்கிறது.

சூரியனுக்கு இடையில் பூமி எங்கு வருமோ அதற்கு கோணம் என்றார்கள். பூமிக்கு அருகில் உள்ள சந்திரனை மூல ராசியாகக் கொண்டு நட்சத்திரங்களின் ஆட்சி கணிக்கப்படுகிறது. சூரியனை மையமாக வைத்தே ஒன்பது நவக்கோள்களும் சுற்றி வருகின்றன. விண்வெளியில் புதன், சுக்கிரன், பூமி, செவ்வாய், குரு, சனி, ராகு, கேது, யுரேனஸ், நெப்டியூன், புளூட்டோ அவை இருக்கின்றன. மனிதர்கள் பூமி உலகத்தில் வாழ்வதால் நாம் பார்க்கும் தூரத்தில் சந்திரன் இருக்கும் நிலையையும், ஜோதிடத்தில் சேர்த்துக் கொண்டார்கள். ஆனால் யுரேனஸ், நெப்டியூன், புளூட்டோ சுமார் 300 லிருந்து 500 கோடி மைல் தூரத்தில் இருக்கின்றதால் சூரிய குடும்ப கோள்களிலிருந்து ஜாதகத்தில் சேர்க்கப்படவில்லை. ஆனால் மாஸ்டர் சி.வி.வி அவர்கள் அன்றே இதற்கு 13-ன் Planetary Forces என்று கோள்களால் மனிதனுக்கு பாதிப்பு இல்லாமல் இருக்க இந்த 13-ன் Planetary Forces கோர்ஸை கொடுத்தார். இதன் மூலம் மனித உடலில் தூல சூட்சம பாதைகள் ( ஆஸ்டரல் பாதை) தூய்மையாக்கப்பட்டு முன் வினை சமமாக காக்கப்படுகிறது.

1. Epithelial Ulans - எபிதால்லியல் உலன்ஸ்
2. Jaggery Tyres - ஜாக்கிரி டையர்ஸ்
3. Smalls - ஸ்மால்ஸ்
4. Small Quarters - ஸ்மால் குவார்டர்ஸ்
5. Arbuncle Quills - அர்பங்குல் குயில்ஸ்
6. Quil Higher Angle Quarters - குயில் ஹையர் ஏஞ்சல் குவார்ட்ஸ்
7. Shatters - ஷாட்டர்ஸ்
8. Causes Involving Fainters - காஸ்சஸ் இன்வால்விங் ஃபயின்டர்ஸ்
9. Jesters - ஜெஸ்டர்ஸ்
10. Jesters Branches - ஜெஸ்டர்ஸ் பிராஞ்சஸ்
11. Firely Cells - ஃபயர்லி செல்ஸ்
12. Cells Mercury - செல்ஸ் மெர்குரி
13. Kundalini Featers - குண்டலிணி ஃபீட்டர்ஸ்

